பண்ணரிய விண்மீன்கள் படைதொடர வந்துலகைப்
பார்க்கின்ற தன்மை பெற்றாய்;
பாரிலிவன் புலவர்பலர் பின்தொடர வருந்தன்மை
படைத்துயர்ந்த பான்மை பெற்றான்;

அன்னவன்தான் உடனாட மகிழ்ந்திங்கே உனையழைத்தான்
அம்புலி! ஆட வாவே!
ஆற்றலுள வில்லிகதை சாற்றுகவிக் கம்பனுடன்
அம்புலி! ஆட வாவே!

பாடல் - 3

கலைகளினில் எண்ணிரண்டே உனக்குண்டு வையகத்தில்
காகுத்தன் காதை சொல்லும்
கம்பனிவன் பெற்றகலை அறுபத்து நான்கென்று
கவிஞரெலாம் சொல்லு கின்றார்;

நிலையின்றித் தேய்ந்துலகில் பின்வளரும் நிலைபெற்று
நிற்கின்றாய்; இவனோ இங்கே
நிலையாய புகழுடனே தேய்வின்றி வளர்கின்ற
நிலைபெற்றே உயரு கின்றான்!

மலைகளென வருமுகிலால் நீமறைக்கப் பட்டொளிதான்
மங்கிடுவாய்; இவனோ என்றும்
மலையெனவே வரும்புகழின் உச்சிமிசை நின்றொளிதான்
மாறாமல் நல்கி நிற்பான்;

அலையாமல் நிலையாக ஆடவரும் நினைவிருந்தால்
அம்புலி! ஆட வாவே!
ஆற்றலுள வில்லிகதை சாற்றுகவிக் கம்பனுடன்
அம்புலி! ஆட வாவே!

## அம்புலிப் பருவம்

பாடல் - 4

பூமகளை மனமுடைய மாயவனின் இதயமதில்
பொருந்துமொரு தன்மை பெற்றாய்;
பூவுலகில்இவனவனைத் தன்மார்பில் ஏற்றுயர்ந்த
புகழ்பெற்று வாழு கின்றான்;

ஓமென்ற கடலிலலை உன்வரவு கண்டால்தான்
உலகத்தே மகிழ்வு கொள்ளும்;
உயர்புவியில் மக்களெலாம் இவன்கவிதை கேட்டவுடன்
உளம்நிறைந்த உவகை கொள்வார்;

நாமலரும் பாடல்களால் இவனுலகில் உனைச்சிறையில்
நயந்தடைந்த கார ணத்தால்
நலிவுற்றுக் குறைமதியாய்த் தளர்வுற்று வானிடையில்
நடக்கின்றாய் இவைக ளெல்லாம்

ஆமென்றால் உயர்வுற்றான் இவனழைக்க மறுத்திடாமல்
அம்புலி! ஆட வாவே!
ஆற்றலுள வில்லிகதை சாற்றுக் கம்பனுடன்
அம்புலி! ஆட வாவே!

பாடல் - 5

திமிரமிடு கடலுகுத்த விடமுண்ட சிவன்முடியிற்
செறிவுற்று நிற்ப தாலே
சிந்தனையில் இறுமாப்புச் சேரவிவன் தன்னழைப்பின்
திறமெண்ணி மகிழ்ந்திடாமல்

அமைதியுடன் செல்லுவதோ இவனந்தக் கடலிடையில்
அறிதுயில்தான் பொருந்துமாயன்
அடியிரண்டும் முடிகொண்ட மன்னவரும் அதிசயிக்க
அகிலமிசை வாழு கின்றான்;

அமைதியாங் குன்னொளிதான் அகிலமிசை ஒருநாளில்
வராமல் அணைந்து போகும்;
அன்பனிவன் கவியொளியோ அணையாமல் நிதம்பெருகி
அகிலத்தில் பெருமை சேர்க்கும்;

அம்மையொரு பாகமுளான் விழியமர்ந்த நாண்மதிநீ
அம்புலி! ஆட வாவே! உனையழைத்தான்
ஆற்றலுள வில்லிகதை சாற்றுகவிக் கம்பனுடன்
அம்புலி! ஆட வாவே!

பாடல் - 6

பண்டுமுதல் இன்றுவரை நின்னுடலில் தக்கனிடு
சாபத்தாற் பரவி நின்று
பரிதவிக்கச் செய்கயநோய் தீர்ந்தினிய மெய்பெற்றுப்
பார்வலமாய் வருதல் வேண்டின்

அண்டருல கில்லாத மருத்துவனாய் இவ்வுலகில்
அவதரித்த மருந்து வல்லான்
அகிலத்தில் இவனென்பர்; அறியாய்நீ தமிழ்க்கவிதைச்
சஞ்சீவி அடிக ளெல்லாம்

கொண்டுனது நோய்தீர்ப்பான் குறையகன்ற வாழ்வுறலாம்
கோதிலா ஒளிகள் பெற்றுக்
குவலயத்தில் முழுமதியாய் இறவாத புகழ்பெற்றுக்
குலவிடலாம்; ஆத லாலே

அண்டமெலாம் தன்கவியால் அளந்துயர்ந்த புலவனுடன்
அம்புலி! ஆட வாவே!
ஆற்றலுள வில்லிகதை சாற்றுகவிக் கம்பனுடன்
அம்புலி! ஆட வாவே!

## அம்புலிப் பருவம்

பாடல் - 7

உரகமொரு நாளிலுனை விழுங்கிடவோர் சாபமுள
தன்மையினை உண்மை யென்றே
உரைத்திடுவார் அக்குறைதான் உனைவிடுத்திங் ககலவென
உளங்கொள்ளின் ஒன்றுசொல்வேன்

அரவமொரு நாளிலன்று தில்லைமூ வாயிரவர்
அணிதலைமைக் குருக்கள் சேயை
அரிசினத்தால் கடித்திடவும் அவன்மாளக் கண்டுடனே
தன்கவிதை அடிக ளாலே

வரியரவ விடமாற்றி வைத்தகதை நாடறியும்
வளர்தமிழால் இவனு முன்னை
வாழுதற்கு வைத்திடுவான்; அரவுன்னைத் தீண்டாத
வரங்கொள்வாய்; அந்தச் செய்கை

அரியதிலை இவனுக்கே ஆதலினால் வித்தகனோ
டம்புலி! ஆட வாவே!
ஆற்றலுள வில்லிகதை சாற்றுகவிக் கம்பனுடன்
அம்புலி! ஆட வாவே!

பாடல் - 8

வஞ்சியென வருதமிழிற் கொஞ்சுகவி வளமனைத்தும்
இவன்பாடும் வண்ணம் கேட்டு
வாழ்க்கையினில் நல்லின்பம் வாய்த்திலகி மகிழ்ந்திடலாம்;
வானகத்தே உடுக்க ளோடு

கொஞ்சிவரும் நீயவன்தன் குளிர்கவியில் நான்மறைகள்
கூறுதிறம் பலவும் கேட்டுக்
குவலயத்தில் மறையணிந்த முனிவரெனப் பலர்
கொள்கைவரப் பெற்று வாழ்வாய்! போற்றும்

எஞ்சலிலாக் கடலுன்னால் மகிழுதல்போல் இவன்பாடும்
இன்கவியால் நீயு வப்பாய்
இவன்கவிதை இருப்பதனால் நீயுலகில் பலர்போற்ற
என்றென்றும் நிலைத்து வாழ்வாய்!

அஞ்சாத கவிக்கரசன் ஆனதமிழ்ப் புலவனுடன்
அம்புலி! ஆட வாவே!
ஆற்றலுள வில்லிகதை சாற்றுகவிக் கம்பனுடன்
அம்புலி! ஆட வாவே!

பாடல் - 9

நெறிகொண்ட உலகத்தில் மேலுற்ற நெடுவானில்
நீயுற்று வாழ வேண்டில்,
நெஞ்சுற்ற கவிமாரி பொழிகின்ற கவிவாணர்
நினைவுற்று வாழ வேண்டில்,

குறிகொண்ட எல்லைக்குள் அடங்காத கடவுளெனக்
குவலயத்தில் வாழ வேண்டில்,
குறையாத நிலவென்னும் கதிர்கொண்டிவ் வுலகத்தைக்
குளிர்விக்கும் தன்மை வேண்டில்

செறிகின்ற புலமைக்குள் உறைகின்ற இவனோடு
விளையாட உன்னி வாநீ;
செகமளந்த மாயவனைத் தன்கவியுள் அடக்கியவன்
சினமீறிச் சீறி நின்றே

அறைகின்ற சொற்சாபந் தனையடைதல் மெய்யாகும்
அம்புலி! ஆட வாவே!
ஆற்றலுள வில்லிகதை சாற்றுகவிக் கம்பனுடன்
அம்புலி! ஆட வாவே!

பாடல் - 10

பழமறைகள் அறிந்துலகில் தேவரினம் மதிக்கவரு
கின்றதொரு பான்மை பெற்று,
பரமகுரு எனப்புகழ வருவியாழ முனிமனைவி
பரவுபுகழ்த் தாரை என்னும்

அழகிமன வசமாகி உறவுகொளும் நின்னுடைய
வஞ்சனையை அறிந்து கொண்டோர்
அகிலமிசைப் பழிசொல்ல வருமுன்னை இவனழைத்தும்
ஆடவர வில்லை யென்றால்

இழிவுவரும் உனக்குமிவண் இழிவுவரும், ஆதலினால்
இரக்கமுடன் இயம்பு கின்றேன்
ஏதுமறி யாதவன்போல் நீசென்றால் இவன்கவிதை
ஏவுமொரு சாபம் சேரும்;

அழகுடைய இராமனெழில் பாடவரு புலவனுடன்
அம்புலீ! ஆட வாவே!
ஆற்றலுள வில்லிகதை சாற்றுகவிக் கம்பனுடன்
அம்புலீ! ஆட வாவே!

# 8. சிற்றிற் பருவம்

பாடல் - 1

தும்பிக் கூட்டம் வெருண்டோடத்
தோன்றும் கல்லாம் தோளுடையான்,
தோகை தன்னைப் பிரியாத
தோன்றற் கிரங்கும் மனமுடையான்,

அம்பிக் கூட்டம் இடைவாழும்
அன்பன்; பரதன் வரக்கண்டே
அண்ணல் இராமன் சார்பாக
அவனை வெல்வேன் எனப்போகிக்

கும்பிட் டவனைத் தொழுதேற்றிக்
கூறும் அன்பு மொழிகேட்டுக்
குழையும் பரதன் பின்வந்த
கொள்கை பாடும் தமிழ்க்கம்ப!

செம்பொத் திருக்கும் சேவடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே!
செழிக்கும் கவிதைச் செழுமுகிலே!
சிறியேம் சிற்றில் சிதையேலே!

பாடல் - 2

பொய்யே அறியா திருக்கின்ற
புகழுக் குரிய யாமெல்லாம்
பொற்போ டுனக்குக் குற்றேவல்
புரியும் சிந்தை கொண்டுள்ளோம்!

கையிற் பிடித்த சிலையிடையாய்!
காவும் மரமும் புனல்வழியும்
கங்கை உண்டிங் குண்ணமலர்
கனியும் தேனும் மிகவுண்டே;

உய்யும் நிலையை இன்றடைந்தோம்;
உவந்தே ஒருநாள் எம்மூரில்
உறைவாய்! என்னும் குகப்பெருமான்
உள்ளம் உரைத்த கம்பனெனும்

செய்ய புலவா! சீரடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே!
செழிக்கும் கவிதைச் செழுமுகிலே!
சிறியேம் சிற்றில் சிதையேலே!

பாடல் - 3

உள்ளம் மகிழப் பணிசெய்யும்
உண்மைக் குகனை உடல்தழுவி
உயர்ந்த நெஞ்சாய்! இக்கானம்
உரிதே எனக்கென் றுரைசெய்தாய்

கள்ளம் அறியாய்! என்தம்பி
காலம் எல்லாம் நின்தம்பி
காவிக் கிணைசொல் விழிகொண்ட
கன்னி சீதை நின்கொழுந்தி

வெள்ளக் கங்கை தனையாளும்
வேடர் தலைவ! என்றுரைசெய்
வேந்தன் புகழைப் பாடியவா!
வெள்ளம் தள்ள வந்தொதுங்கும்

தெள்ளும் மணலால் யாமமைத்த
சிறியேம் சிற்றில் சிதையேலே!
செழிக்கும் கவிதைச் செழுமுகிலே!
சிறியேம் சிற்றில் சிதையேலே!

பாடல் - 4

நெறிகள் அமைப்பேன் கானிடையே
நிகழும் நெறிகள் யானறிவேன்;
நிலைக்கும் கானில் நீயுறையின்
நேடிக் கனிகாய் யான்கொணர்வேன்;

உறையும் சாலை நினக்கிசைய
உடனே அமைக்கும் திறமுடையேன்
உம்மை என்றும் பிரியாமல்
ஒன்னார் மற்றும் விலங்குகளால்

உறுகண் வருதற் கொவ்வாதேன்
உயிரைக் கொடுத்தே உடன்காப்பேன்
உண்மை எனுமோர் குகனுள்ளம்
உலகம் அறியப் பாடியவா!

செறியும் அழகுச் சீரடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே!
செழிக்கும் கவிதைச் செழுமுகிலே!
சிறியேம் சிற்றில் சிதையேலே!

பாடல் - 5

அன்னான் குகன்தன் உரைகேளா
தண்ணல் அவனைத் தனிநோக்கி
அன்போ டெந்தைக் கின்றுமுதல்
ஐவர் மக்கள் உன்னுடனே;

மன்னும் பரதம் அவனாள
மற்றிக் கான் நீயாள்க!
மாறா எந்தை ஆணைவழி
மான்கண் சீதை உடனாக

இன்னே கானம் செல்கின்றேன்
எந்தன் ஆணை இவணிருந்தே
இனிதே யாள்க! என்றுரைத்த
ஏந்தால்! கவிதைக் கோரரசே!

செந்நெற் கழனி நாடுடையாய்!
சிறியேஞ் சிற்றில் சிதையேலே!
செழிக்கும் கவிதைச் செழுமுகிலே!
சிறியேஞ் சிற்றில் சிதையேலே!

பாடல் - 6

அங்கே மக்கள் சுற்றமினம்
ஆளுங் காவற் குளனும்பி
அச்சந் தருமோர் வனத்துதவி
ஆற்றத் துணையாய் இவனுள்ளான்;

இங்கே வாழும் கிளைகாவல்
இனிதே ஆள்தல் தனைவிடுத்தே
என்னோ டேகின் இவரெல்லாம்
ஏங்கித் தவிப்பர்; ஆதலினால்

பொங்கும் துயரிற் பொருந்தாமல்
புரத்தல் கடனாம் என்னாணை
பொருந்தி வாழ்க! எனராமன்
புகலும் மொழிசொல் பெருமானே!

செங்கால் நோக யாமிழைத்த
சிறியேம் சிற்றில் சிதையேலே!
செழிக்கும் கவிதைச் செழுமுகிலே!
சிறியேஞ் சிற்றில் சிதையேலே!

பாடல் - 7

மேவற் கரிய வனத்தூடே
மிதிலைப் பொன்னாள் சானகிதன்
மென்மைப் பூவார் திருவடிகள்
மெல்ல நடந்த துயரடைய,

தாவா வலிமைத் தனித்தம்பி
தடந்தோள் சுமந்த வில்லுடையான்;
தன்கை அமைத்த சாலையெழில்
தன்னைக் கண்ட காகுத்தன்

யாவை யாதும் இலாதார்க்கே
இயையா என்னப் பாராட்டி
இசைத்த சொல்லின் இனிமைநலம்
எழுதும் கம்ப! எம்தலைவ!

தேவர் அமுதம் திகழ்கவியாய்!
சிறியேம் சிற்றில் சிதையேலே!
தென்னார் கவிதைத் தேன்கடலே!
சிறியேம் சிற்றில் சிதையேலே!

பாடல் – 8

கழுகின் குலத்தைக் காத்துவரும்
கருணை வேந்து, கடுங்கானில்
கயவன் பத்துத தலையுடையான்,
கன்னி தன்னைக் க்வர்ந்தேக

அமுத சீதை துயர்மாற்ற
அரக்கன் உடலம் தூளாக
அடித்துக் கிழிக்கச் சிறகொடிந்தே
அலறி வீழ்ந்தான்! இராமன்வரத்

தொழுது வணங்கிச் செய்திசொலத்
தொடங்கும் நிலையில் உயிர்பிரியத்
துடித்த வள்ளல் நிலைபாடும்
தூய கவிதைத் துறையுடையாய்!

செழுமைத் தமிழ்சொல் எம்கம்ப!
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சேலார் பொன்னிச் செந்தமிழா!
சிறியேம் சிற்றில் சிதையேலே!

பாடல் - 9

பொங்கும் ஆழி தோண்டியவர்;
புனிதக் கங்கை வரவழைத்தோர்;
பொல்லா வேங்கை மானினங்கள்
புரிந்து நட்பாய்ச் செய்தவர்கள்;

எங்கும் உள்ளார் போற்றிசெய
எழுந்த குலத்தின் பெருமையினை
என்றும் உயிராய்க் காத்தவர்கள்;
இதயத் தூய்மை உள்ளவர்கள்;

தங்கி வாழ்ந்த குலம்பிறந்தும்
தாரம் கொண்ட பீழையினைத்
தவிர்க்கும் வலிமை இலனென்று
தவித்த இராமன் புகழ்பாடும்

சிங்கக் கவிதைத் தனிவேந்தே!
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சேலார் பொன்னிச் செந்தமிழா!
சிறியேம் சிற்றில் சிதையேலே!

பாடல் - 10

அமரா பதிக்கு நாயகனும்
அடைந்த துயரை மாற்றவென
அரக்கன் தலைகள் ஐயிரண்டும்
அறுத்த பெம்மான்; தந்தைசொலத்

தமது முடியைத் தனிதுறந்து
தம்பி சீதை தனைத்தொடரத்
தருவார் வனத்திற் குடனேகித்
தாரம் இழந்து தவித்தவராய்க்

குமையும் வள்ளல் துயறுற்றுக்
கொட்டும் சொல்லைத் தீந்தமிழில்
கொடுத்துச் சிறந்த நாவுடையாய்!
குறையா வேதக் கொள்கைதமிழ்ச்

சிமிழில் அடக்கிச் சிறந்தவனே!
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சேலார் பொன்னிச் செந்தமிழா!
சிறியேம் சிற்றில் சிதையேலே!

## 9. சிறுபறைப் பருவம்

பாடல் - 1

வாய்மையொடு தன்மரபு நிலைகாக்கும் நிலைவினொடு
தன்னுயிர் துறந்த வள்ளல்
தன்மைந்தன் எனவந்த பரதனுக்கு முன்தோன்றித்
தருமநிலை நிற்க வென்று

தீமைபுரி அரக்கரினம் வேரறுப்ப தெனமுடிவு
செய்துசிலை ஏந்து கையால்
தேவியினைப் பிரிந்ததுயர் நனிவருத்தச் செயல்மறந்து
தருமநெறி சிதையு மாறு

கோமுறைகள் தவறிடவவ் வாலியவன் மார்பூடு
கொடுங்கணையை ஏவ வாலி
கூறியவப் பழியுரைகள் குளிர்தமிழில் வரைந்தகவிக்
குலத்தரசே! பரவி நின்ற

சேய்மையறும் உலகமெலாம் சிறந்தபுகழ் பூண்டகவி
சிறுபறை முழக்கி யருளே!
செந்தமிழர் செல்வமென வந்தகவி மன்னநீ
சிறுபறை முழக்கி யருளே!

## சிறுபறைப் பருவம்

பாடல் - 2

தம்பியுயிர் கொளத்துணிந்த மதமுடைய னாகியவன்
தாரத்தைக் கற்ப ழித்தாய்!
தாரணியில் வேந்துமுறை நன்குணரும் வேந்தநீ
தவறான செயல்கள் செய்தாய்;

எம்பியென என்னையவன் வந்தனைய நண்பனான்
இன்னலவற் கில்லை யாக்கும்
இயல்புடனிக் கதிர்மகனுக் குலகறிய உதவுகின்ற
இதயத்தால் மறைந்து நின்று

நம்பியெனை வந்தவனும் நலமடைய வேண்டுமென
நாண்வளைத்துப் பகழி தொட்டேன்
நடந்தகதை முடிந்ததிது நடப்பதினி நலமென்று
பலவாறு நவின்று நின்ற

செம்பதுமத் தடியண்ணல் உளங்கொண்ட திருச்செல்வ!
சிறுபறை முழக்கி யருளே!
செந்தமிழர் செல்வமென வந்தகவி மன்ன நீ
சிறுபறை முழக்கி யருளே!

பாடல் - 3

நாடாளு மாசைவர வெனைக்கொல்ல நின்துணையை
நயந்துமிகக் கொண்ட எம்பி,
நலமறியக் குரக்கினத்தின் செய்கைநிலை உலகத்தே
தன்செயலால் நாட்டி விட்டான்;

ஏடாளும் புகழுடைய நினதுசிலை தொடுத்தசரம்
என்வலிய மார்பி னூடே
இன்றுநுழை வுற்றசெயல் தனிலதனால் கிட்கிந்தைக்
கினியவனும் சொந்த மாக

வீடாளும் அரசெனக்கு விரும்பியவன் தந்ததனால்
விளம்புமொர செய்தி கேள்நீ
விரைந்திவனும் தவறுசெயின் ஒருசரத்தால் இவனுயிரை
விடவையாய் என்று வாலி

சேடாரும் வகைசொன்ன உரைதமிழிற் செப்பியவ!
சிறுபறை முழக்கி யருளே!
செந்தமிழர் செல்வமென வந்தகவி மன்னன் நீ
சிறுபறை முழக்கி யருளே!

பாடல் - 4

பொங்கரவின் சீற்றமென உயிர்த்துவரு மிளையவனும்
போர்கண்ட வில்லை யூன்றிப்
பொருதுசின முற்றவனாய் நின்றநிலை கண்டுவரு
பூங்கொடியாள் தாரை யோடு

மங்கையரை நோக்காது தரைநோக்கி மாமிகண்ட
மருகன்போல் நின்றான் தன்னின்
மலர்முகத்தை நனிபார்த்தே எம்மில்லம் தனில்நின்றன்
மலரடிகள் பட்ட பேறும்

இங்கெவர்க்கும் எட்டாத புண்ணியமாம் வானவரும்
எய்தரிய செல்வ முற்றோம்
இங்குனது சினமாற்று படைவீரர் அஞ்சுகிறார்
இனிதருள வேண்டு மென்றே

செங்கரங்கள் கூப்பியவன் செப்பியசொல் இயம்பியவ!
சிறுபறை முழக்கி யருளே!
செந்தமிழர் செல்வமென வந்தகவி மன்னன் நீ!
சிறுபறை முழக்கி யருளே!

## சிறுபறைப் பருவம்

பாடல் - 5

வெய்யபகை அழித்தரசு தந்தவர்கள் உங்களது
வீரமதை உணர்ந்து நிற்பார்
வீறுபெறு வாலிவலி மாயவொரு சரமுதவு
வீரருமக் குதவி வேண்டா

உய்யுவழி பெற்றவர்கள் உமையிகழ்வர் எனில் விரைவில்
உயிரிழந்து போவ ருண்மை;
உலகுபுகழ் கற்புமயில் சீதையினை நாடிவரும்
உதவியது செய்வர் மெய்யே;

நம்மையுயர் வுறவைத்த நாயகர்தாம் மகிழ்வுபெற
நடத்துசெயல் அறிந்து, தூதர்
நாலுதிசை யுளபடைகள் தமையழைக்கப் போயினர்கள்
எனநவின்ற தாரை சொல்லைச்

செம்மையுறு தமிழ்மொழியில் நன்மைபெறச் செப்பியவ!
சிறுபறை முழக்கி யருளே!
செந்தமிழர் செல்வமென வந்தகவி மன்ன நீ
சிறுபறை முழக்கி யருளே!

பாடல் - 6

போருற்ற வேளையிற் பகைகொண்டு களம்வந்த
பொல்லாத அரக்கர் சேனை;
புகைகொண்ட நெருப்புக்கே ஆற்றாத பஞ்செனப்
போயுற்றங் கொழியு மாறு

நேருற்ற இராவணன் மீதெய்த சுடுசரம்
நினைவெலாம் அழித்து, மேலும்
நிலையுற்ற மகுடங்கள் படைவாளி யாவுமே
நிலமீது வீழ வைக்க

வேரற்ற மரமென வலிசாய்ந்து நின்றதை
வென்றதோர் வள்ளல் கண்டு
வீறுற்ற படையுடன் போருக்கு நாளைநீ
விரைவுடன் வருக வென்று

சீருற்ற மொழியினில் சொல்லியசொல் செப்பினாய்
சிறுபறை முழக்கி யருளே!
செந்தமிழர் செல்வமென வந்தகவி மன்னன் நீ
சிறுபறை முழக்கி யருளே!

பாடல் – 7

அரிதென வயலவர் நினைசெயல் முடிதிறம்
அமைந்தவன்; அனுமனெனும்
அன்பர்கள் பணிசெய அமைந்தவன் இராமனின்
ஆணைகள் பெற்றவனாய்

பொருகடல் தனையுடன் கடந்தொரு வனமதில்
பொருந்திய சீதையினை,
புகழ்பெறக் கண்டவள் தருமணி பெற்றுடன்
புண்ணிய மூர்த்தியினை

விரைவுடன் கண்டவள் துயர்தனை அகற்றிட
விளம்பிய சொல்கேட்டு
வேதனை அகன்றுளம் மகிழ்வது கொள்நிலை
கவியினில் விளம்பியவா!

முருகுடன் வளர்தமிழ் தனையறி புலவநீ
முழக்குக சிறுபறையே!
முத்தமிழ் வித்தகன் எனவரு கம்ப நீ!
முழக்குக சிறுபறையே!

## சிறுபறைப் பருவம்

பாடல் - 8

கண்டனன் கற்பினுக் கணியினை இலங்கையில்
எனவுரை கழறியவன்;
கடுவிட மனையவர் திறல்மிகு மரக்கர் தம்
கடுந்திறல் அடக்கியவன்;

வண்டிமிர் பூவணி சீதையைக் கண்டவன்
வளர்துயர் மாற்றியவன்;
வலியவர் அரக்கர்தம் மன்னவன் எதிரினில்
வார்த்தைக ளாடியவன்;

மண்டிடு சினமிகு மதியிலி அரக்கர்கள்
மனக்கொதிப் புடனேதீ
மற்றவன் வாலினில் வைத்ததை நகரினில்
வைத்தவன் புகழ்பாடித்

தெண்டிரை கொழிகடல் வளர்பவற் கன்பநீ
முழக்குக சிறுபறையே!
தென்றலைத் தன்கவி கொண்டநல் மன்னவ
முழக்குக சிறுபறையே!

பாடல் - 9

இத்தரை வளைகடல் கடத்திவண் வந்ததும்
எழிலுறை சீதையெனும்
எம்மனை இருப்பிடம் அறிவுற முயன்றினித்
தேடுதற் கிடமின்றி

அத்தனை இடத்தினு மலைந்தனன் என்துணைக்
கவியினம் அக்கரையில்
அறிந்திடத் துடித்திடும் நிலையினில் அமர்வுற
அன்னையைக் காணாமல்

வித்தகன் திருவடி சேர்ந்தினி என்சொல
விளைவது துன்பமென
விரைந்திவண் உயிர்விடல் நலமெனக் கருதிடும்
வீரனின் அவலநிலை

முத்தமிழ்க் கவியினிற் செப்பிய கம்பநீ!
முழக்குக சிறுபறையே!
முக்கடல் அமுதமென நற்கவி தந்தவ!
முழக்குக சிறுபறையே!

பாடல் – 10

மேருவை விண்ணினை விரிந்தள உலகினை
வென்றுபி ளந்தோட
வேரினி இலையெனச் சொலுவணம் நூறிடு
விறலுடை சிலைசுமந்த

ஆரியன் பகழிகள் வ்லியன எனுமுரை
அறிந்தும் உரைத்தனையே;
அஞ்சினை ஆதலின் மறைத்தனை உருவினை
ஆதலின நீபிழைத்தாய்!

வீரமும் பெருமையும் பெற்றவன் என்றுரை
விளம்பிடு நீயந்த
வெல்வலிப் பறவைமுன் நின்றிட வழியிலே
என்றுரை விளம்பிடுநற்

காரிகை மொழியினைக் காவிய மாக்கினை!
முழக்குக சிறுபறையே!
கல்வியிற் பெரியவன் எனவரு கம்ப நீ!
முழக்குக சிறுபறையே!

# 10. சிறுதேர்ப் பருவம்

பாடல் - 1

எய்தரிய உலகங்கள் பலவாறு துதிசெய்ய
இருக்கின்ற எனது நாதன்;
இதயத்தில் உருவாகி வளர்கின்ற காதலை
என்னுள்ளம் மகிழு மாறு

பொய்யற்ற மறைபோலும் சொல்கொண்டு செவிகுளிரப்
புகன்றெனக்கே உயிரைத் தந்த
புண்ணியமே! தவப்பயனாய்ப் பூத்துவரும் அறம்
புகழுதற்கோர் வார்த்தை இல்லை போல்வாய்!

நெய்யுற்ற தீபோல எனையாண்ட துன்பங்கள்
நீங்கிடயான் வாழ்வு பெற்றேன்;
நினக்குரிய கைமாறு செய்யவழி இல்லெனக்கு
நீவாழ்க! என்று வாழ்த்தும்

செய்யவள்தன் உரைபுகன்ற பொய்யறியாக் கவிமகன் நீ
சிறுதேர் உருட்டி யருளே!
சேலாடும் வயல்கொண்ட தேரழுந்தூர் வாழ் கம்ப!
சிறுதேர் உருட்டி யருளே!

பாடல் - 2

கரியகடல் தனையிந்தச் சிறியவடி வதுகொண்டு
கடந்தெங்ஙன் இங்கு வந்தாய்!
கருதறிய தவப்பலனோ! முனிவர்தரு சித்திகளோ
கட்டுரைப்பாய்! என்று சீதை

அரியசெயல் செய்யனுமன் தனைவினவ அன்னவனும்
அவளடியைத் தொழுது வாழ்த்தி;
அஞ்சனையாள் பெற்றவள்நான் அஞ்சனத்தை ஒத்தநிறத்
தண்ணலடி சிந்தை வைத்தே

பெரியகடல் தாண்டியிவண் உன்னைநனி காணவந்து
பெருமைபல பெற்று விட்டேன்;
பிறவியெனும் கடல்கடந்தேன் பேரின்பம் தனையுற்றேன்
எனவுரைசெய் அனும னுக்குந்

திருமகள்தன் வாழ்த்தருளும் திறந்தமிழிற் கூறியநீ
சிறுதேர் உருட்டி யருளே!
செந்தமிழர் உய்யவென வந்தகவி மன்ன நீ
சிறுதேர் உருட்டி யருளே!

பாடல் - 3

விலங்குமனத் தரக்கருறை வெற்பினிடைப் பிரிவுதரும்
வேதனையில் உறைந்து வாடும்
விலக்கரிய தவமலரை, இறைவியென மறைபேச
இலங்கிவரும் அன்னை தன்னை;

இலங்கையினில் யான்காணேன்; இற்பிறப்பும் நற்பொறையும்
இணைந்துவரும் கற்பும் சேர்ந்தே
எழில்நடந்தான் இடக்கண்டேன்; உனைப்பிரியாதுடனாகி
நடக்குமோர் இளைய வீரன்

வலங்கொள்ளச் சமைத்தவொரு சாலையிடை இருந்துதவம்
வாழ்கின்ற தன்மை யொத்த
வனிதையினை நான்கண்டேன்; வணங்காத முடியரக்கர்
வாழ்வழிக்கும் நெருப்பே என்று

சிலைநிகரும் தோளனுமன் செப்பியசொல் செப்பியநீ
சிறுதேர் உருட்டி யருளே!
சேலாடும் வயல்கொண்ட தேரமுந்தூர் வாழ்கம்ப
சிறுதேர் உருட்டி யருளே!

## சிறுதேர்ப் பருவம்

பாடல் - 4

மாநகரம் முழுவதிலும் தானெழுந்து பற்றிதீ
மாகுரங்கொன் றிட்ட தன்று
மலரிருந்த தையலினைச் சிறைவைத்தாய் அவள் மனத்தீ
மன்னவனுன் கொற்ற மோடு

தேனலருஞ் சோலைகளைத் தெய்வநலத் திலங்கையினைத்
திசைதோறும் எரித்த தென்றும்,
தெய்வமலர்ச் சீதைதவம் நின்தவத்தின் திறமதனைச்
சீறியே அழித்த தென்றும்;

வானரமொன் றிந்நகரில் வைத்திடும்தீ எனவென்று
நந்திதந்த சாப மென்றும்,
வழங்கிடுசொல் வீடணனை மதியாத இராவணனும்
வாழ்விழந்து போன காதை,

தேனலர்ந்த சொற்களினால் தானளந்தே உரைத்தவன் நீ
சிறுதேர் உருட்டி யருளே!
திருமகளின் உளமுறையும் பெரியகவி மன்னவன் நீ
சிறுதேர் உருட்டி யருளே!

பாடல் - 5

பாதகஞ்செய் அரக்கரின முளைத்துவரு கின்றவிவன்
பழுதுபடிச் செய்த போதும்,
பார்ப்பதிலை எந்நலங்கள், கேட்பதிலை பிறர் சொற்கள்,
பலவாறு புகல்வ தென்னை;

வேதியர்கள் தம்துயரைப் போக்கவென வந்தசெயல்
பொருந்துவதாம்; அபய மென்று
விளம்பியவர் நலங்காத்தல் எனதுகடன்; இனியவரே
வேறொன்றும் நினைத்த லில்லேன்

ஆதலால் வீடணன் சொல் அபயமொழி கேட்டவுடன்
அளித்துள்ளேன் அபய தானம்;
அன்புடைய நீரவனை அழையுமெனச் சொல்லியவன்
அடைக்கலப் பெருமை சொல்லும்

தீதகன்ற வள்ளல்மொழி செப்பியநற் கவியரச!
சிறுதேர் உருட்டி யருளே!
திருமகளின் உளமுறையும் பெரியகவி மன்னவ நீ!
சிறுதேர் உருட்டி யருளே!

பாடல் – 6

கருநிற முகிலென வருபடை முனமொரு
கம்பமு டன்பாய்ந்து
கண்விழி பிதுங்கிட அவர்சிரம் அறுத்துடன்
காற்றென வருந்தேரில்

தருவலி படைத்தவைந் தளபதி உயிர்விடத்
தன்வலி காட்டியவன்
தனிச்சிறு குன்றென வளரிரு தோளிணை
கொட்டியே தாவியவன்,

பருவரை நிகர்தரு முடலமை அரக்கர்கள்
பரிபவ முற்றோட
படுகளத் திந்திர சித்தனின் கொடுங்கணை
பட்டிட அடங்கியவன்

உரைசொல இராவணன் உளச்சினம் உரைத்தவ
உருட்டுக சிறுதேரே!
உலகக் கவிஞர்தம் தலைமைக் குரியவ!
உருட்டுக சிறுதேரே!

பாடல் - 7

அயன்முதலாய் வந்தகுல மதனிடைநீ தோன்றிமறை
அத்தனையும் ஓதியே அறிந்தாய்;
ஆற்றலுள மன்னவன்நீ தீவினையை நயந்தவல
மாகடலில் வீழ்ந்துமே அமிழ்ந்தாய்;

மயன்செய்த நகரெரியில் வெந்ததென நீகலங்கி
மனக்கவலை பற்பல அடைந்தாய்;
மாசில்பர தாரமதை அஞ்சிறையில் அடைத்தவளை
மாறாத காதலால் அடைவேம்;

தயங்காது பேசுவது மானமிடை பேணுவது
காமமெனச் சொல்லியே திரிவோம்;
தாரணியில் நன்றுநம கொற்றமென நின்றுமொழி
கும்பனுரை தன்னையும் உலகில்

செயங்கொண்ட தமிழாலே தந்துலகை வென்றகவி
சிறுதேரு ருட்டி யருளே!
சேலாடும் வயல்கொண்ட தேரழுந்தூர் வாழ்கம்ப!
சிறுதேரு ருட்டி யருளே!

பாடல் - 8

பரியமலை எனவுடலைக் கொண்டவலிக் கும்பகன்னன்
நெடுநாளாய்ப் பயிலு றக்கப்
பள்ளிதனை விட்டெழுப்பி விடவெழுந்து வரக்கண்ட
இராவணனும் பரிந்து நோக்கி,

தருகவெற்றி குரக்கினத்தைத் தானழித்திங் கெனவேண்டத்
தனிமலைபோல் நின்ற அன்னான்
தகுபெரும்போர் வந்ததுவோ தனிச்சீதை துயர்மாறத்
தானில்லை யோநம் பீடும்

வருபுகழும் மாய்ந்ததுவோ எனத்தரும் நெறிபேச
மறித்தவனை வைதே உன்றன்
வாய்திறந்து நெறிசொல்ல நீயமைச்சன் தானோவென்
றவன்கேட்க, வந்த சொல்லைத்

திருவளரும் செந்தமிழால் தருபுலமைக் கவிமகன்நீ
சிறுதேரு ருட்டி யருளே!
திருமகளின் உளமுறையும் பெரியகவி மன்னவன் நீ
சிறுதேரு ருட்டி யருளே!

பாடல் - 9

உந்துகவி என்பிடரைப் பிடித்துந்தக் களம்செல்லும்
உளங்கொண்டேன் ஒன்று சொல்வேன்
காலனுக்கும் அச்சம்வர அன்னவனை ஆடவிட்ட
கடுந்திறமை பெற்ற யானும்

முந்தியந்தக் களத்திடையிற் பொன்றியபின் கயிலையினை
முயன்றெடுத்த தோளாய்!
முயற்சியினைக் கைவிடுக! எனைவென்றார் நினைவெல்ல
முயன்றிட்டால் வெற்றி காண்பார்;

சந்ததமும் புகழ்கொண்டாய்! எனச் சொல்லிக் களமேகித்
தன்னுயிரை ஈந்து நன்றிச்
சரித்திரத்தில் இடம்பெற்ற முன்னோடி கும்பகன்னன்
சரிதத்தைச் சந்த மாக்கிச்

செந்தமிழில் வரையவென சந்தகவி மன்னவநீ
சிறுதேர் உருட்டி யருளே!
சேலாடும் வயல்கொண்ட தேரழுந்தூர் வாழ்கம்ப!
சிறுதேர் உருட்டி யருளே!

## சிறுதேர்ப் பருவம்

பாடல் - 10

அஞ்சனை பெற்றவன் அரியனை தாங்கிட
அம்புவி எல்லாமும்
அரிதினில் வலம்வரு வாலியின் சேயெனும்
அங்கதன் வாளேந்த

மிஞ்சிய புகழ்க்குறு நாயகன் பரதனும்
வெண்கவி கையேந்த
மென்மனத் திளையவர் இருவரும் நலமுடன்
கவரிகள் மேல்வீச

எஞ்சலில் புகழ்கொடைச் சடையனின் மரபினர்
ஏந்தியே தருமுடியை
எழில்பெரு தவப்புகழ் கொள்குல முனிவரும்
எடுத்துடன் சூட்டியதைச்

செஞ்சொலில் கவிதையெ னத்தரு கம்பநீ
உருட்டுக சிறுதேரே!
செந்தமிழ் உலகினை வெல்கவி மன்னவ!
உருட்டுக சிறுதேரே!

101 பாடல் முற்றுப் பெற்றது.

### சாற்றுக் கவிதைகள்

கல்வியில் மிக்கவன் கம்பன்; அவன்புகழைப்
பிள்ளைத் தமிழாகப் பேசவைத்த-நல்லதொரு
நாச்சி குளத்தார் நமது தமிழுக்குச்
சாட்சிக் குரிய சரக்கு.

புலவர் உதயை. மு. வீரையன் எம்.ஏ.,

கண்போல் கவிசெய்தக் கம்பனுக்கோர் பிள்ளைத்தமிழ்
நண்பர் படைக்க நலன்செய்தப்-புண்ணியஞ்சேர்
நாச்சி குளத்தாரை நாட்டோர் வழுத்தனுமாம்
ஆச்சர்யம் அந்நார் பணி.

முனைவர் தமிழரசி எம்.ஏ.,

இராமனைக் கண்ட

# கம்பருக்குத் தாலாட்டு

( பிள்ளைத் தமிழ் )

இரண்டாம் பரிசில்

புலவர் முத்து. சம்மந்தன்

# தமிழ் வணக்கம்

தேன்வளர் குறிஞ்சி கான்வளர் முல்லை
தெளிபுலம் நிலையறு பாலை
சீர்வளர் மருதம் திரைவளர் நெய்தல்
திகழ்ந்தொளிர் ஐவகைத் திணையும்

ஈன்றவள், ஆய்புலம் ஊன்றிய மாந்தர்
இருவிழி மணியென இலங்கி
எழில்கொழி தமிழெனும் தொழுதகும் அணங்கின்
இணைசிலம் படிமலர் பணிவாம்;

வான்புகழ் படைத்துத் தானுல களந்த
வண்டமிழ் வளமெலாம் நுகர்ந்து
வடமொழிச் சொல்லைத் தமிழினிற் சேர்க்கும்
வழிமுறை வரன்முறை அமைத்தோன்

ஆன்தரு பாலும் தேன்கனிச் சாறும்
அளையுமி ராமனின் கதையை
அளத்தருள் கம்பன் களித்தெழு மதலைக்
கணிசெயும் தமிழ்க்கவி தழையவே.

# 1. காப்புப் பருவம்

## வான்மீகி

பாடல் – 1

உலகிடை வழங்கிய வடமொழி உணர்ந்ததில்
ஓங்குயர் மதிப டைத்தோன்
ஒப்புயர் வில்லா உறுதவம் புரிந்திட
ஓர்வளர் புற்று றைந்தோன்;

இலகிடும் பொருகணைச் சலதியன் வேடனை
ஏசிய முன்றொ டர்கொண்டு
இராகவன் மாகதை எழுதுவான் மீகியை
இறைஞ்சுதும்; இன்ப மென்றும்

குலவிடும் தமிழிற் குழைவுறு மனத்தினன்
கொஞ்சிடும் மொழிபு கன்று
கோதறு வில்லியின் மீதுறு காதலைக்
குறையா திசைத்த எங்கோ!

நிலவிடும் தோகை நிலையுடற் கண்கள்
நிறைகழை கண்டு மஞ்ஞை
நிமிர்ந்துதன் இனமென மயங்கிடும் ஊரனை
நெடிதிவண் காக்க வென்றே.

## அகத்தியர்

பாடல் – 2

அகரமுதல் உயிர்க்கணமும் ககரமுதல் மெய்க்கணமும்
ஆராய்ந் தறிந்து ணர்ந்தோன்
அகத்திணையும் புறத்திணையும் அணிந்தொளிருந்
ஆழ்ந்துபயின்று ணர்ந்தேன் தமிழ்மொழியை

பகரரிய அறிவொளியான் முத்தமிழ்க்கும் இலக்கணமாம்
பாவார் அகத்தி யத்தைப்
படைத்தருளிச் செந்தமிழாம் பயிர்வளர்த்த அகத்தியனைப்
பராவிப் பணிந்து வப்பாம்;

காப்புப் பருவம்

தகவெழின்மெய் நிறைசொல்லில் தழைத்திங்கே ஓங்கிநிற்கும்
தாயாம் தமிழ்மொ ழிக்குத்
தனையளித்த தனிமகனாய்த் தமிழ்மகனாய்ச்
தானே தனக்கு நிகராய்ப் சான்றோனாய்த்

புகலரிய யாப்புடைய புகழ்பெற்ற காப்பியத்தைப்
பூரித்தளித்த வள்ளல்
பொங்கிவரு புனற்பொன்னி தங்கிவளர் அழுந்தூரின்
புலவனைப் புரக்க வென்றே.

## தொல்காப்பியர்

பாடல் - 3

ஆருயிரி னுருவாகி ஐம்புலனை வளர்க்கின்ற
அன்னைமொழி தமிழ்மொழியை அறிந்த மைந்தன்
அகத்தியற்கு மாணாக்க னாகியவன் முதன்மையுற்றே
அரியதொரு பெரும்புலமை பெற்ற செல்வன்,

பேருலகில் தமிழ்மொழியிற் பேசுமிகு வழக்காய்ந்து
பிழையகல எழுந்தொடுசொல் பொருள்பி ரித்துப்
பேறரிய இலக்கணத்தைப் பாரறியத் தந்தவனைப்
பெரும்புகழ்த்தொல் காப்பியனை அஞ்ச லிப்பாம்;

ஏருறவா லிவ்வைய மியங்குமெனும் நன்னினைவால்
இருக்கின்ற நன்செயெலாம் நீர்மை கொள்ளும்
எச்செல்வ மானாலு மச்செல்வம் எல்லாமே
எழுந்தீண்டிக் குவியவரும் பான்மை கொள்ளும்

காருருவுங் கால்வலியாற் கறங்குதலுஞ் சேர்வான்பால்
காலத்திற் பொழிதலிலும் ஒத்தி யங்கும்
காரோடும் மேதியொடும் சீராடும் அழுந்தூரின்
கவிமன்னன் கம்பனையே புரக்க வென்றே

## காப்புப் பருவம்

## திருவள்ளுவர்

பாடல் - 4

இழுமென் மொழியான் விழுமிய சொற்ற
எழுசீ ரீரடியன்,
எண்குண மிக்கோன் தன்னோ டுவமை
இலனோர் வாலறிவன்,

அழுவம் நிகராங் குறளா லகமாம்
அலர்மே லேகியவன்,
ஆழி யறவோன் திருவள் ளுவனின்
அடிகளை ஏத்துதுமே!

குழுமுங் கருங்கார் கொட்டும் மழையால்
குறையாப் பெருவெள்ளம்
குமுறுங் கடல்வாய் கூடுதல் போலக்
கொழுமைக் கடல்வண்ணற்

கொழுதும் முகிலாய்ப் பொழிகவித் துளிகள்
கூடிப் பெருக்கெடுத்துக்
குனிவரி சிலையோன் குணக்கடல் சேரக்
கொடுத்தவற் காத்திடவே.

## நக்கீரர்

பாடல் - 5

ஈத்துவக்கும் இன்பத்தால் இசைபெற்றோங்கும்
இணையில்லாத் தமிழக்குலத்தின் காதல் வாழ்வில்
இன்'கொங்கு தேர்வாழ்க்கை' என்னும் பாட்டால்
ஏற்பட்ட பூசலிலே 'இறையனாரே'

யாத்திருக்கும் பொருள்நுட்ப திட்பம் என்ன?
என்கருதி அமைத்துள்ளீர், இயம்பு வீரே?
என்றுரைத்தாய், கனல்பறக்க விழித்த போதும்
எதிர்த்தெழுந்த நக்கீர! கழல்ப ணிந்தே

## காப்புப் பருவம்

ஏத்தெடுத்தோம்; எம்முயிராந் தமிழ்மொ ழிக்கே
எழுத்துக்கும் சொல்லுக்கும் பொருளி னுக்கும்
இறையாலும் பிழைவருதல் கூடா தென்னும்
எண்ணத்துள் வலிமைபெறத் தமிழை அன்றே

காத்தவன் நீ, ஆதலினெம் விழைவை ஏற்றுக்
கடிகமழும் கொடியாவும் ஓங்கு தெங்கின்
காய்வருடப் புயல்சுமக்கும் அழுந்தூ ராளன்
காப்பியத்தான் கம்பனையுங் காப்பாய் நன்றே

## இளங்கோ அடிகள்

பாடல் - 6

உரைசால் பத்தினிக் குயர்ந்தோர் ஏத்துவர்
ஊழ்வினை உருத்துவந் தூட்டும்
உற்றிடும் அரைசியல் பிழைத்தோர்க் கறமே
ஓர்கூற் றாமென உரைத்தோன்

திரையார் பொன்னித் திருமகள் கண்ணகி
சிலம்பொலி செவியுள் அழுந்தச்
சிலையுளம் அழுந்தச் செய்த இளங்கோ
திருவடி எண்ணுவம் போற்றி;

வரையாச் செல்வம் வரையாய் அழுந்தும்
வருவிருந் தோம்புநர் இட்ட
வளவிய உணவு வயிற்றிடை அழுந்த
வன்பசி இடமிலா தழுந்தும்

கரைசார் கனிகளிற் காளைகண் ணழுந்தக்
கனிகண் மண்ணி லழுந்தும்
காட்சியார் அழுந்தூர் மாட்சியான் கம்பனைக்
கண்ணெனக் காத்தருள் கென்றே.

## காப்புப் பருவம்

## சீத்தலை சாத்தனார்

பாடல் - 7

ஊரலர் தூற்றிய தூற்றலில் ஒன்றையும்
உள்ளங் கொள்ளா உயர்குண மங்கை
உரிமைக் கோவலன் உயிரகன் றதன்பின்
ஒப்பிலள் இல்லற வாழ்வினை; அன்றியும்

தேரறச் செல்வியம் மாதவி தன்மகள்
தெள்ளிய அறிவினள் மணிமே கலையைச்
சேர்த்தனள் துறவில்அச் செய்தியை யாத்த
சீத்தலைச் சாத்தனை ஏத்துதும் நன்றே;

சீரணி வான்முகில் வெண்மை துறக்கச்
செந்நெல் விளைந்து தன்பயிர் துறக்கச்
சேற்றின் முதிர்கழை சாற்றினைத் துறக்கச்
செய்யவள் தன்மைத் தவ்வை துறக்க

நேரல ரானார் பகையினைத் துறக்க
நேருறு வறிஞரை நிரப்பு துறக்க
நீடிய வளநிறை திருவழுந் தூரின்
நிலைபெறு கம்பனைப் புரந்தருள் கென்றே

## திருத்தக்க தேவர்

பாடல் - 8

எவ்வாய் மருங்கு சென்றாலும்
எழில்வாய் மகளிர் மன்றல்கொள்
ஏந்தல் பெருமை இயம்புங்கால்
ஏற்ற சந்தம் இசைத்தவன்காண்,

செவ்வாய் எண்மர் நுகர்ந்ததன்பின்
செய்ய துறவு பூண்டவன்பேர்
சிந்தா மணிசெய் திருத்தக்க
தேவன் தாளைப் போற்றுதுமே;

## காப்புப் பருவம்

எவ்வாய் நாவைப் பாமணக்கும்
எடுத்த காவைப் பூமணக்கும்
ஈவோர் கையை மழைமணக்கும்
ஏற்போர் கையைப் பொருள்மணக்கும்

வெவ்வே றெழிற்பா வைநீக்கி
விருத்தப் பாவை மணங்கொண்டு
வென்றி கொள்ளுந் திருவழுந்தூர்
வேந்தன் கம்பற் புரக்கென்றே.

## சமய குரவர் நால்வர்

பாடல் - 9

ஏடார்மலர் வாடும்மலர் என்றேமனம் எண்ண
இறைவன்மகிழ் செந்தேன்தமி ழிசையாம்மலர்மாலை
எடுத்தோயணிவத்தோர்பணி இயற்றும்புகழ் அப்பர்,
ஏணார்திரு வாரூருறை ஓர்சுந்தரர், அன்பு

வாடாதொளிர் மணிவாசக வள்ளல்பெரு மானார்,
வளமார்தமிழ் வளமேவிய பிரமாபுரச் செம்மல்
வரலாற்றொடு மிணையுஞ்சம யாசாரியர் நால்வர்
மலர்மாணடி மனஞ்சேர்ந்திடத் தொழுவாந்தலை தாழ்த்தே

காடார்குழல் மடவாரெலாம் களைகட்டிடும் காலம்
காதார்குழை அளவோடிய கண்ணின்நிழல் கண்டு
கயலாமெனக் கதுவும்மட நாரைக்கணம் நாணக்
கா ணுங்கயல் நகைகொண்டவண் கழுநீரிடைத்துள்ளும்

நாடாவளம் நாளுந்தரும் வேளாண்மையில் ஓங்கும்
நனிவன்கொழு நுனிபாய்ந்துழ அழுந்துந்திரு வழுந்தூர்
நாமேவிய பாவாலுயர் நல்லேரெழு பஃதை
நவின்றேயுயர் வளநாடனின் நலங்காத்தருள் கென்றே

## சடகோபர்

பாடல் - 10

ஐந்நிலத்தில் முல்லைநிலம் விரும்ப லன்றி
அழகான குறிஞ்சியிலும் அமர்ந்த மாலை
ஆயிரம்நான் கடுக்கிவரும் பாவாம் பூவில்
அந்தாதித் தொடைசூட்டிக் கூவிக் கூவி

நைந்துருகும் மனத்தானைத் தமிழ்நா வானை
நன்மாறப் பெயரானை நம்மாழ் வானை
நாவலர்பா பண்மருவப் படி னானை
நற்குருகூர்ச் சடகோபன் தனைத்து திப்பாம்;

மைந்துமிகு புலவரெலாம் வாழ்த்திப் போற்ற
மற்றவர்கள் சீரெடுத்து வணங்கிப் போற்ற
வார்கூந்தல் நப்பின்னை போல வாகி
வான்தமிழிற் பாவிசைத்த சடகோ பன்மேல்

செந்தமிழிற் பேர்பாடி ஊரும் பாடிச்
சீர்பாடி அந்தாதித் தொடையும் பாடித்
திகழொளிசேர் புகழலங்கல் சூட்டிக் கொண்ட
திருவழுந்தூர்க் கம்பனையே காக்கவென்றே.

# உ. செங்கீரைப் பருவம்

பாடல் - 1

மெய்வண்ண அறிவுடைய மேலோரான் இவ்வுலகம்
மேன்மேலும் வாழு மெனவே
மேலவர்தங் காப்பியத்துள் உலகமென முதற்சொல்லை
விண்போதுடம் ஓது முறையே

மைவண்ணன் காப்பியத்தும் மங்கலமாம் அச்சொல்லை
வைத்தாள வாய முதமே
வண்ணமொடு பெருகிவர மடித்தவலக் காலின்மேல்
மற்றோர்கால் ஏறி யுறவே

கைவண்ண ஏடேந்தக் கையாணி கோலமிடக்
கவிபாடி மகிழு புலவ!
காதுண்ட சிறுகுழையும் மேனின்ற சூழியமும்
கண்டோரை யாட விடவே

செய்வண்ணம் சிறந்தோங்கும் பைவண்ண அழுந்தூர
செங்கீரை யாடி யருளே!
திருவெண்ணெய் வருசடையன் அருளுள்ளம் உறைகம்ப
செங்கீரை யாடி யருளே!

பாடல் - 2

கார்குலவு நிறத்தான்பேர்க் காப்பியத்தைச் செய்தபின்பு
கற்றார்கள் ஏம முறவே
காவிரிசூழ் திருவரங்கத் தமையரங்கக் கவின்மேடை
கள்ளாரும் பாவி ரியவே

சீர்குலவு சடையன்பேர் நூறுகவிக் கொன்றாகச்
சென்றோங்கி ஏற்ற முறவும்
தெய்வப்பேர்க் காப்பியத்துள் மனிதப்பேர் அடிக்கடியும்
சேர்ந்துவரப் பாட்டி சைத்தல்

நேர்முறையோ? அன்றன்று; நீக்கிடுக! என்றாங்கு
நின்றசிலர் கூறி விடவும்
நெறிதவழும் நீர்மையனை அறிவறிந்த வெண்ணையனை
நிலைத்தோங்கு நேய முறவே

தேர்வுசெயும் ஆயிரத்தில் ஒருவனெனத் தேர்ந்திசைத்தோய்
செங்கீரை யாடி யருளே!
திருவெண்ணெய் வருசடையான் அருளுள்ளம் உறைகம்ப
செங்கீரை யாடி யருளே.

## செங்கீரைப் பருவம்

பாடல் - 3

துன்னிவரு முகில்வண்ணன் தோன்றியுலா வரும்போது
தோள்கண்டார் தோளே கண்டார்
தொடுகழல்சேர் தாள்கண்டார் தாளேகண்டார், தடக்கைத்
துளங்கல்கண் டாரும் அஃதே

சென்னிமுதல் முழுவடிவைச் சேல்விழியார் தம்முள்ளும்
சேர்த்தொன்றாய்க் கண்டார் யாரோ?
செம்பஞ்சுச் சீறடியார் செயல்போலப் பயில்வோரும்
சிந்தித்துத் திளைக்குந் தோறும்

தொன்றுமுதிர் சொல்கண்டார் சொல்லேகண் டார்பொருளின்
தொகைகண்டார் தொகையே கண்டார்
தொகுத்தவணி கண்டாரும் அஃதேகண்டாரன்றிச்
சுவைமுழுதும் யாரே கண்டார்?

தென்தமிழில் நுண்பொருள்கள் பின்னிவரச் செய்தவனே
செங்கீரை யாடி யருளே!
திருவெண்ணெய் வருசடையன் அருளுள்ளம்
செங்கீரை யாடி யருளே!

பாடல் - 4

கொடியாடக் கொம்பாடக் கொழுந்தோடு மலர் பூத்துக்
கொத்தோடு குலுங்கி யாடக்
கோத்தும்ப தேன்குமிறு சுரும்பினங்கள் மகரந்தம்
கோதியவன் கொங்கி லாட

அடியோடு கழைசாய்த்துப் பிழிசாறு வழிந்தோட
அடுகின்ற புகைவா னேறி
ஆதவனின் கதிரொளியை மறைப்பதுபோ லணிதிரண்டே
அடையடையாப் பரந்து லாவ

இடியோடு விண்ணூடு கடிதேறி விளையாடும்
எழிலியென அதைம யங்கி
இசைக்குயில்கள் வாய்மூட எழறிரோகை மயிலாட
எழினியெனத் திரையு மாடச்

செடியோடு மலராடத் தென்றல்வள ரமுந்தூர
செங்கீரை யாடி யருளே!
திருவெண்ணெய் வருசடையான் அருளுள்ளம்
செங்கீரை யாடி யருளே.

பாடல் - 5

தலைக்கடன் இதுவெனத் தாயுனை ஈன்று
தாங்கிப் புறந்தந்தாள்;
தன்கடன் இதுவெனத் தந்தையும் ஓர்ந்து
சான்றோன் எனச்செய்தான்;

குலக்கொழுந் துனக்குக் கொல்லன் கடனெனக்
கொடுத்தான் எழுத்தாணி;
கொற்றவன் நினக்கு நற்கவி வேந்தெனக்
கொடுத்தான் மணிமுடியே;

நிலைக்கடன் உளதென நேர்ந்தொரு காவியம்
நிறுவிப் பெயர்ந்தாயே!
நீடிய புகழே! நேடிய நட்பே!
நெறியோ டெழுந்துயர்பா

அலைக்கொரு கடலே! கலைக்கொரு நிதியே!
ஆடுக செங்கீரை!
அகிலிடு கொழும்புகை முகிலிடும் ஊர
ஆடுக செங்கீரை

## செங்கீரைப் பருவம்

பாடல் - 6

புவிபுகழ் தயரதன் பொன்னணி நினக்குப்
புனையவும் வந்தானே!
பொன்செய் தொட்டில் பொருவில் கோசலை
பூட்டவும் வந்தாளே!

சிவிகையும் கொண்டு செய்யவன் பரதன்
சீர்செய வந்தானே!
சிலைதவழ் கையன் செறிகழல் இலக்குவன்
தேர்கொடு வந்தானே!

கவிகையும் கொண்டு சத்துருக் கனனும்
காணிய வந்தானே!
கண்களி கொள்ளக் கனிந்துயர் தமிழ்த்தாய்
காதலின் முன்னாளில்

அவிசொரிந் தாயிரம் வேட்டபின் வந்தோய்
ஆடுக செங்கீரை
அகிலிடு கொழும்புகை முகிலிடும் ஊர
ஆடுக செங்கீரை

பாடல் - 7

மஞ்சனை வண்ணன் வான்பொருள் யாவும்
வழங்கி வந்தோங்க,
மலரணி குழலி அலருரை மங்கை
வாழ்த்த வந்தோங்க,

நெஞ்சுறும் எண்ணம் கொஞ்சுறு மொழியில்
நிரலே நின்றோங்க,
நெரிபடுஞ் சொல்லில் முரிபட லின்றி
நிமிர்ந்து கொண்டாங்கே

பஞ்சிழை கொண்ட செஞ்செவே யாடை
பரந்து சென்றாங்குப்
பாவியல் பயிலும் காவியஞ் செய்து
பன்னிய பண்பாளா!

அஞ்சன வண்ண! செஞ்சொலின் மன்ன!
ஆடுக செங்கீரை!
அகிலிடு கொழும்புகை முகிலிடும் ஊர
ஆடுக செங்கீரை

பாடல் - 8

அற்றங் காவாச் சுற்றுடைப் பூந்துகில்
அரையில் நின்றாட,
ஆயிரங் கதிரொளி பாய்ந்தொளி ராழி
அணிவிரல் வந்தாட,

மற்றுங் கோவை மணிபொன் முத்து
மார்பி லசைந்தாட,
மாற்றுயர் பவள மணிவாய் இதழில்
மலர்நகை மின்னாடக்

குற்றங் காணாக் கோதையர் சூழ்ந்து
குரவை பயின்றாடக்
கோனே பொன்னே தேனே முத்தே
என்றே கொண்டாடச்

செற்றஞ் சேரார் சேரமுந் தூர
செங்கோ செங்கீரை!
சீரிய கூரிய தீவிய மொழியாய்
செங்கோ செங்கீரை

## செங்கீரைப் பருவம்

பாடல் - 9

ஐயவி அப்பிய நெய்யணி முச்சி
அசைய அதனோடும்
அணிபிறை போல முப்புரி முத்தணி
அழகிய நுதலாட,

மையணி புருவ மலர்முக நுதலில்
வயங்கி பொட்டோடு
வான்முழு மதியென வயிரச் சுட்டியும்
வந்து செறிந்தாட,

மெய்யரை ஞாணில் மேவய மணியொடு
விளங்கிழை வடமாட,
மென்கழல் தண்டை வில்லிடு கிண்கிணி
மிடைந்து கலந்தாடத்

தெய்வப் பாடல் செய்கவி வேந்தே
செங்கோ செங்கீரை!
சீரிய சுரிய தீவிய மொழியாய்
செங்கோ செங்கீரை

பாடல் - 10

கால்படு தூளிக் கணம்பாடு முன்னங்
கல்லுங் கனியாகும்;
கைபடின் முள்ளும் கவினுற விரிந்து
கான்கொள் மலராகும்;

பால்வண அன்னம் பைந்நிறக் கிள்ளை
பசுங்கண் மயில்யாவும்
பார்வை படினே பாவைய ராகிப்
பரதம் பயின்றாடும்;

**செங்கீரைப் பருவம்**

கால்வலி யானை கலைமான் உன்றன்
கண்ணொளி படும்போதே
கன்னிய ராகிக் களிநடம் புரியும்;
கழிபுனல் நிலைதோறும்

சேல்விளை யாடும் திருவழுந் தூர
செங்கோ செங்கீரை!
சீரிய கூரிய தீவிய மொழியாய்
செங்கோ செங்கீரை

## 3. தாலப் பருவம்

பாடல் – 1

தேம்பாய் பலவின் நிழலாடித்
தீரா ஆவல் மேலோங்கத்
திரிந்து திரிந்து புன்மேய்ந்து
திரிந்த மருப்புப் புனிற்றெருமை

தேம்பா மாணாக் கன்நாளும்
தேர்ந்த பாடம் மனத்திருத்தத்
திரும்பத் திரும்பப் பயலல்போல்
தேமா நிழலில் அசைபோட்டுக்

கூம்பா மலர்சூழ் குளம்படிந்து
குடைந்தே யாட மடிநெரிந்து
கூடும் அமுதம் பெயக்கண்டு
குளிர்நீர் பிரித்துப் பெடையன்னம்

தீம்பால் பருகும் திருவழுந்தூர்ச்
செல்வா தாலே தாலேலோ!
தெய்வத் தமிழ்த்தாய் ஈன்றுமகிழ்
சேயே தாலே தாலேலோ

## தாலப் பருவம்

பாடல் - 2

நெஞ்சில் இன்பச் சுமையேற
நெடுவா னுச்சி வெயிலேற
நேரும் பசியும் உடனேற
நேரேர் உழவர் வழிநோக்க

அஞ்சல் அஞ்சல் எனச்சிலம்பும்
அணியின் ஒலிகேட் டகமலரும்;
அன்னம் பயில நடைபயின்றே;
அருகிற் சென்று முறுவலிக்கும்

மஞ்சள் முகத்து மருதியர்கள்
மணங்கொள் தத்தங் கொழுநர்க்கு
வரையா அன்பை அமுதோடு
மகிழ்ந்தே யூட்டிப் பொழுதெல்லாம்

செஞ்சொல் விளைக்கும் திருவழுந்தூர்ச்
செல்வா தாலே தாலேலோ!
தெய்வத் தமிழ்த்தாய் ஈன்றுமகிழ்
சேயே தாலே தாலேலோ

பாடல் - 3

எய்தும் பொருளை உள்நினைவார்
ஏற்றம் உயர நீரசையும்
எருது பூட்ட நேரசையும்
இணையும் ஏரின் நிசையசையும்

செய்யும் செயலில் சீரசையும்
செறிந்த எருவின் தளையசையும்
செம்மை சான்ற அடிபதியும்
சேந்து நீரின் தொடைபொலியும்

## தாலப் பருவம்

மொய்கொள் புலத்தைப் பண்படுத்தி
முளைத்துத் தோன்றும் களைகட்டி
முறுகி வளரும் பயன்கண்டு
முழுமை பெற்ற மனத்தோடு

செய்யுள் விளைக்கும்திருவழுந்தூர்ச்
செல்வா தாலே தாலேலோ!
தெய்வத் தமிழ்த்தாய் ஈன்றுமகிழ்
சேயே தாலே தாலேலோ.

பாடல் - 4

கொழிக்கும் முத்து நகைமாதர்
கொண்ட பணியைத் தலைக்கொண்டு
குரலைக் குறிலா அமைவித்துத்
கொடுவாய்க் கதிர்வாள் கூன்பிறையைப்

பழிக்கும் நுதலிற் பதிந்தொளிரும்
பருவப் புருவ வில்கோட்டிப்
பாய்கண் அம்பை எய்தெய்து
பறிக்கும் களையோ டுயிர்பறிக்க

விழித்து நோக்கும் அவர்கொழுநர்
விடுமூச் சாங்கு நெடிலாக
வினையில் கையை இடையூன்றி
வெஃகிச் செய்யும் வேளாண்மை

செழித்துச் சிறக்கும் திருவழுந்தூர்ச்
செல்வா தாலே தாலேலோ!
தெய்வத் தமிழ்த்தாய் ஈன்றுமகிழ்
சேயே தாலே தாலேலோ

## தாலப் பருவம்

பாடல் - 5

புட்டில் சுமந்த கோதண்டன்
புக்க காலை மிதிலைவளர்
பூவை கண்ட காட்சியினைப்
பொன்னி அவற்காண் மாட்சியினைச்

சுட்டிச் சொல்ல மனங்கொண்டோ
சொல்லும் பொருளும் அணிசேர்த்துச்
சொரிவான் வேண்டி விரலமுதைத்
துவர்வாய் வைத்தே ஆராய்ந்து

தொட்டிற் கிடந்து மேன்முகட்டைத்
துணைப்பூ விழியால் பார்த்திருந்து
தோலா நாவால் இசைகூட்டிச்
சுவைத்தே னமுதப் பாடல்தரத்

திட்டஞ் செய்தாய்! திருவழுந்தூர்ச்
செல்வா தாலே தாலேலோ!
தெய்வத் தமிழ்த்தாய் ஈன்றுமகிழ்
சேயே தாலே தாலேலோ

பாடல் - 6

எண்ணில் எழுத்தில் தன்னிற் சிறந்தோன்
இருத்தல் கண்டொருவன்
இன்னுந் தன்னை அவற்கும் மேலா
இலங்க முயல்வான் போல்

வண்ணந் தீன்ற வெண்ணித் திலத்தின்
வண்ணங் கண்டன்னம்
மறு, தன் வண்ணம் என்றே நாணி
மணிநீர் குடைந்தாடி

## தாலப் பருவம்

வெண்ணித் திலத்தின் குவைமே னின்றிள
வெயிலின் கதிராடி
விரித்த சிறகின் ஈரம் புலர்த்தி
வெண்மை மெருகேற்றம்

தண்ணந் துறைசேர் திருவழுந் தூர
தாலே தாலேலோ!
தண்டமிழ்ப் பொழிலில் தழைகவிக் குயிலே
தாலே தாலேலோ.

பாடல் - 7

தொண்டிரை இலங்கைக் கண்டியின் மன்னன்
சீயப் பரராசன்
தேடா வறுமை நீடிய தாலே
தேம்பும் நாட்டார்கள்

கொண்டிடும் பசியின் கொடுமையைப் போக்கக்
கொள்ளான் வழியேதும்,
கொழிதமிழ்ப் புலவர் நாவாய் மொழியாற்
குறித்தான் திருமுகமே!

நண்பொடும் அதனைக் கண்ணுற் றதுமே
நாவாய் நாவாயா
நல்லுயிர் ஓம்பும் உலைக்குறு பொருளந்
நாளே ஈந்தானோர்

தண்ணளி வெண்ணெய்க் கண்ணணின் நண்ப
தாலே தாலேலோ!
தண்டமிழ்ப் பொழிலில் தழைகவிக் குயிலே
தாலே தாலேலோ

## தாலப் பருவம்

பாடல் - 8

பொற்சங் கெடுத்துப் பாலைப் புகட்டின்
புந்தி வளராதாம்,
புத்தொளி வெள்ளிச் சங்கால் புகட்டின்
வித்தை பொலியாதாம்,

செற்றம் இலராய் மற்றவர் செப்பத்
திருப்பாற் கடல்மூழ்கித்
திருமால் கையில் திகழும் சங்கைச்
சேர்த்தார் கொடுவந்தே!

முற்றிய அன்பால் பெற்றவள் நாளும்
முப்பால் முகந்தூட்ட
முன்னிமை சொக்கப் பொன்வளர் தொட்டில்
முத்தே கணவளராய்!

சற்றுங் குறையாத் தகைசால் புலவ
தாலே தாலேலோ!
சங்கத் தமிழின் துங்கக் கவிஞ
தாலே தாலேலோ

பாடல் - 9

நீரிற் சங்கம் உறங்க மேதி
நிழலிற் படிந்துறங்கும்,
நேர்தார் உண்டும் உறங்கச் செய்யாள்
நெடுந்தா மரையுறங்கும்,

தூரில் ஆமை உறங்கச் சிப்பி
துறையிற் றுதைந்துறங்கும்,
தோன்றும் போரில் அன்னம் உறங்கத்
தோகை பொழிலுறங்கும்,

ஊரில் யாரும் உறங்க உறங்கா
துன்னிமை போராடல்
உனக்கிது முறையோ புனக்கிளி யனையாய்?
உயிரே கண்வளராய்?

தாரில் ஊறும் வேரிக் கவியே
தாலே தாலேலோ!
சங்கத் தமிழன் துங்கக் கவிஞ
தாலே தாலேலோ.

பாடல் - 10

முன்னை நல்வினை முதிர்பய னால்வரு
முத்தே சீராளா!
முற்றிய வேள்வியின் நற்றவக் கொழுந்தே
மூவாப் பேராளா!

தொன்மை சேர்தமிழ் வன்மை மேவிய
தோலா நாவோயே!
துறைபெறு விருத்தம் உறைபெறு கவிக்கோர்
தோன்ற லானாயே!

நன்னார் மேவிய கீர்த்திய னாயக
நாட்பூ வாயோனே!
நண்ணிய பொருளே! புண்ணிய நின்னை
நாடார் யாரீங்கே?

தன்னிக ரில்லாதத் தண்டமிழ்ப் புலவ
தாலே தாலேலோ!
சங்கத் தமிழின் துங்கக் கவிஞ
தாலே தாலேலோ

## 4. சப்பாணிப் பருவம்

பாடல் - 1

சேறீன்ற தாமரைகள் தேனீன்று வண்டுக்குச்
சிந்தாமல் விருந்து வைக்கும்,
செழிப்பான பொழில்யாவும் பூவீன்று வருகின்ற
தென்றற்கு விருந்து வைக்கும்,

ஆறீன்ற தன்நீரை அருகீண்டு வயற்கெல்லாம்
அமுதாக்கி விருந்து வைக்கும்,
அவ்வயலும் வளமீன்றே ஆங்குவளர் உயிர்க்கெல்லாம்
அளவின்றி விருந்து வைக்கும்

நாறீன்ற நெற்பயிர்கள் நூறீன்று நட்டார்க்கு
நன்றாக விருந்து வைக்கும்,
நயனீன்ற சாறெல்லாம் பயனீன்று கண்ணுக்கு
நாடோறும் விருந்து வைக்கும்,

தாறீன்ற வாழையெலாம் அணிலூட்டும் அழுந்தூர
சப்பாணி கொட்டி யருளே!
தமிழென்னும் அளப்பரிய இமிழ்கடலைக் குடைந்தவனே
சப்பாணி கொட்டி யருளே

பாடல் - 2

சேர்ந்தொளிருந் தாதுகுக்கும் சோலைதொறும், சண்பகமும்
செறிந்திருக்கும் காடு தோறும்,
தேமலரின் போதவிழும் பொய்கைதொறும், வெள்ளியெனத்
திகழ்மணலின் தடங்கள் தோறும்,

வார்ந்தொளிரும் மாதவியின் வேலிகொண்டு வானோங்கி
வளர்பூக வனங்கள் தோறும்,
வயல்தோறும், வளர்தெங்கு செவ்வாழை பூந்தாழை
வளர்கின்ற வனங்கள் தோறும்,

தீர்ந்தறியாக் கால்பலவா ஊர்ந்தேறி யூர்தோறும்
சென்றூட்டிச் சென்ற போதும்
சேர்ந்தவுடல் பலவற்றின் உள்ளிருந்தும் ஓயாத
தேயாத உயிர்கள் போலச்

சார்ந்துவரு புனற்பொன்னி யூர்ந்துவரும் அழுந்தூர
சப்பாணி கொட்டி யருளே!
தமிழென்னும் அளப்பரிய இமிழ்க்கடலைக் குடைந்தவனே
சப்பாணி கொட்டி யருளே

பாடல் - 3

சிலம்புகளே பரலாகச் சிலம்புகின்ற சிலம்போடு
செறிகழலும் சேர்ந்த தாளாள்,
சினமில்லாக் காலத்தும் செந்தீயைக் கொடு நஞ்சைச்
சிந்துமிரு தீய கண்ணாள்,

புலம்புறவே புறந்திரிவாள்புல்லுயிரும் வல்லுயிரும்
பொக்கெனவே பற்றி யுண்பாள்,
பொருந்தியுள வரைகளையே கழங்காக்கி விளையாடிப்
பொழுதுகழி யாட லுடையாள்

சலவுருவாள் தாடகையாள் சரமொன்றால் துளைபட்டுச்
சாயுமுடல் பொழிகு ருதியால்
தனிவண்ணச் செவ்வானம் தரைமீது நனிகாணச்
சாய்ந்தாளி னோசை கேட்டுச்

சலம்புணராக் கொள்கையவர் சார்கின்ற அழுந்தூர
சப்பாணி கொட்டி யருளே!
தமிழென்னும் அளப்பரிய இமிழ்கடலைக் குடைந்தவனே
சப்பாணி கொட்டி யருளே

# சப்பாணிப் பருவம்

பாடல் - 4

நஞ்சனைய நெஞ்சினராம் மாரீசன் சுவாகென்பார்
நாடற்ற வாழ்க்கை பெற்றும்
நாகவிழி நாகநடை நாகமன தோளினராய்
நண்ணியவர் தலைமை ஏற்க

வஞ்சனையும் பொய்வினையும் வரைவின்றி வளர்ந்துள்ள
வாளரக்கர் கூட்டம் ஈண்டி
வாய்த்துள்ள மன்னுயிர்க்கும் மாதவர்க்கும் கொடுமைகளை
மறவாமல் செய்து நிற்கச்

கஞ்சமலர் நயனத்தான் கைவாளிக் கஞ்சியவன்
கடலுள்மா ரீசன் போகக்
கடிவாளிக் கிரையாகி மண்வீழும் சுவாகாங்குக்
கதறுமொலி செவிய லேறத்

தஞ்சமென வருவோரை யஞ்சலெனும் அழுந்தூர
சப்பாணி கொட்டி யருளே!
தமிழென்னும் அளப்பரிய இமிழ்கடலைக் குடைந்தவனே
சப்பாணி கொட்டி யருளே

பாடல் - 5

கன்னிமயில் அனப்பேடை கள்ளிருக்கும் மலர்க்கூந்தல்
காவிக்கண் மிதிலைப் பொன்னி
கார்வந்து களைப்பாறிக் காலுந்த மேலுந்தும்
கடிமதில்கெள் கன்னி மாடம்

ஒன்றியவள் ஓடியகண் நிலைகுத்தக் கரியவனின்
ஒண்கண்ணை உண்க ணுண்ண
உரியவனும் கண்கொண்டான் உணர்வொன்ற ஒருவரகம்
மற்றொருவர் புகுந்து கொண்டார்;

## சப்பாணிப் பருவம்

மன்னவையிற் சனகன்வை கார்முகத்தை மழைவண்ணன்
வளைக்கக்கைக் கொண்ட போது
வைத்தவிழி வாங்காமல் கண்டிருக்க அஃதிற்ற
வானிடியின் ஓசை கேட்டுத்

தன்வளத்தில் தனக்குநிகர் தானேயாம் அழுந்தூர
சப்பாணி கொட்டி யருளே!
தமிழென்னும் அளப்பரிய இமிழ்க்கடலைக் குடைந்தவனே
சப்பாணி கொட்டி யருளே

பாடல் - 6

நீதியின் வழியில் நிற்போர்க் கின்னல்
நேரினும் நிலையாத!
நெறிமுறை தவறும் குருடர்க் கழிவும்
நேர்ந்திடும் விலகாதே!

ஓதியும் உணர்ந்தும் உணர்வழி நின்றோர்
உரைபொருள் வளங்காட்டி,
ஒப்புர வாற்றி உயர்பதம் பெற்ற
உரவோர் செயல்காட்டி,

ஊதியங் கருதா தூழியம் செய்யும்
உத்தமர் உருக்காட்டி,
உயர்செஞ் சோற்றுக் கடனுக் குயிரை
உதவினர் திறஞ்சொன்னாய்!

கோதிலர் குணத்தர் கூடமுந் தூர
கொட்டுக சப்பாணி !
கொழுவிய காவியம் எழுதிய கைகொடு
கொட்டுக சப்பாணி

## சப்பாணிப் பருவம்

பாடல் - 7

காரணி வண்ணன் பேரணி காட்டிக்
கற்பனை நயஞ்செறியக்
காண்பவ ருள்ளம் மாண்புற எழுதும்
கைவல ஓவியனே!

பேரறி வாளன் உலகம் வாவிய
பெற்றியன் திருவேபோற்
பெருகூ ருணியும், பெருந்தகை யாளன்
பெற்றிடும் செல்வம்போல்

ஊரணி கொண்ட மருந்துநன் மரமும்,
ஒப்பில் நயனுடையான்
உற்றிடுஞ் செல்வம் போன்றொளிர் கின்ற
உள்ளூர்ப் பழுமரமும்,

கூரறி வாளரும் கூடமுந் தூர
கொட்டுக சப்பாணி!
கொழுவிய காவியம் எழுதிய கைகொடு
கொட்டுக சப்பாணி

பாடல் - 8

உட்புகை நெஞ்சர் உயிர்க்குல முண்ணும்
ஒழியா இயல்பாளர்
உருவில் வலியர் அருள லரக்கர்
ஒவ்வாக் குலவேரைக்

கட்டொடும் அறுத்துப் பட்டிடச் செய்யும்
காலங் கைகூடக்
கட்டமை வரிவிற் கார்முகிற் காளை
கான்செல வித்திட்ட

ஒட்டகப் புறத்தைப் புறங்கொள் புறமே
ஒன்றும் மந்தரையாள்
ஒல்லா வாயொடும் பொல்லா நகையொடும்
உலவு தலைக்கண்டு

கொட்புறும் அளி, மலர் கூடமுந் தூர
கொட்டுக சப்பாணி!
கொழுவிய காவியம் எழுதிய கைகொடு
கொட்டுக சப்பாணி

பாடல் - 9

தண்டக வனத்துறை தனியவன் அரக்கனாய்த்
தான்திரி வன்கண்ணன்,
தாவர சங்கமம் யாவையும் வாரித்
தானுணும் தறுகண்ணன்,

மண்டலம் விண்டலம் எதிருநர் அழித்தவன்
மாதவள் சீதையினை
வவ்விட, வள்ளலின வதைபட் டுதைபட
மண்ணுழை விராதன்முன்

கொண்டதன் நிலையுணர்ந் தறிவொளி கூடிடக்
கோதைவிற் குரிசில்பாற்
குழைவுறு மனத்தொடு குறைவறத் துதித்துக்
கூறிடும் மொழிகேட்டுக்

குண்டுநீ ரிலஞ்சி கூடமுந் தூர
கொட்டுக சப்பாணி !
கொழுவிய காவியம் எழுதிய கைகொடு
கொட்டுக சப்பாணி

சப்பாணிப் பருவம்

பாடல் - 10

உருகிய செம்பொனும் ஓடும் ஒன்றென
உன்னும் ஒண்மதியும்
ஒன்றிய புலன்கள் ஓரைந் தடக்கும்
உரனும் உடையார்போல்

பருகிடு நீரில் வதிவுறும் ஆமைப்
பாரிய முதுகின்மேல்
பல்பொறி அலவன் நல்லுற வாடிப்
படிந்து விளையாட

அருகுசென் றதனைக் கதுவிடும் எண்ணம்
அறவே இலதாகி
அதனலம் பெருகக் கரைமருங் கிருந்தே
ஆசி யுரைநல்கிக்

குருகுகண் குளிரும் திருவழுந் தூர
கொட்டுக சப்பாணி!
கொழுவிய காவியம் எழுதிய கைகொடு
கொட்டுக சப்பாணி

## 5. முத்தப் பருவம்

பாடல் - 1

புகலும் வாழ்த்து வணக்கமொடு
பொருந்து பொருளும் செறிகுவதாய்ப்
புகழும் நான்கு பொருள்பயக்கும்
புதுமை நடையும் உடைத்தாகி

நிகரில் தலைவன் றனைக்கொண்டு
நிலைக்கும் மலையுங் கடல்நாடும்
நிறுவு நகரும் பொழுதுமிரு
நெடிய சுடரின் தோற்றமொடும்

## முத்தப் பருவம்

தகவின் புனைந்து மணம்புணர்த்துத்
தாதார் பொழிலும் புனலாட்டும்
சாற்றி எட்டுச் சுவைகூட்டித்
தக்கார் தருபொன் முடிசூட்டித்

திகழும் பெருங்காப் பியமுரைத்த
செவ்வாய் முத்தம் தருகவே!
செந்நெற் பழனத் தழுந்தூரின்
செல்வா முத்தம் தருகவே

பாடல் - 2

எண்ணற் றெழுந்த சொற்சுவையும்
இணையற் றெழுந்த பொருட்சுவையும்
இணையுற் றெழுந்த அணிச்சுவையும்
இணைப்புற் றெழுந்த கவிச்சுவையும்

கண்ணுற் றொளிரும் அரங்கேற்றக்
கனிவுற் றார்கண் நீர்பனிப்பக்
காதுற் றார்மெய்ம் மயர்பொடிப்பக்
கையுற் றார்செய்ம் முழக்கொலிபோய்

விண்ணுற் றதிர வியப்போங்க
விரிந்து பரந்த கடலன்ன
விளையும் நயங்கள் எடுத்தோதி
வினவற் கியைந்த விடைநல்கித்

தெண்மை திகழ மொழிமொழியும்
செவ்வாய் முத்தம் தருகவே!
செந்நெல் பழனத் தழுந்தூரின்
செல்வா முத்தம் தருகவே

## முத்தப் பருவம்

பாடல் - 3

வனசங் கீன்ற பருமுத்தும்
வட்கிக் கடலுட் போய்ப்பதிய
வால்வெண் ணிறத்தி னொருமுத்தும்
வண்மைக் கரும்புட் போய்ப்பதிய,

நன்முத் தொன்று நாணுற்று
நன்செய்ச் சாலிக் குட்பதிய,
நயங்கொள் அரிய முத்தொன்று
நாணி வேய்க்குட் போய்ப்பதியத்

துன்புற் றொடுங்கி ஒருமுத்தும்
தும்பக் கொம்புட் போய்ப்பதியச்
சூல்கொள் மேகத் தொருமுத்தும்
தோன்ற லின்றி யுட்பதியத்

தென்சொல் முத்து விளைவிக்கும்
செவ்வாய் முத்தம் தருகவே!
செந்நெற் பழனத் தழுந்தூரின்
செல்வா முத்தம் தருகவே

பாடல் - 4

கஞ்சம் மலர்ந்து கரைதாவிக்
காணும் இஞ்சி முத்தமிடும்,
கண்ணுற் றெழுந்த இவ்விஞ்சி
கடிகொள் மஞ்சள் முத்தமிடும்,

மஞ்சள் செழித்து வளர்ந்தோங்கி
வரிநெற் கதிரை முத்தமிடும்,
வரம்பை மேவி அக்கதிரும்
வளர்ந்த கரும்பை முத்தமிடும்,

எஞ்ச லில்லா இன்கரும்பும்
எழுந்தே கமுகை முத்தமிடும்,
எழுந்த கமுகும் இளநீரை
இனிதே முத்த, அத்தெங்கு

செஞ்ச முகிலை முத்தமிடும்,
செல்வா முத்தம் தருகவே!
செந்நெற் பழனத் தழுந்தூர
செவ்வாய் முத்தம் தருகவே

பாடல் - 5

தூக்கின் அரிய இசைபயின்று
சோலை மாவின் துளிரயின்று
துணையோ டுறைந்து கருவுற்றுத்
துயரற் றீனுங் காலத்துக்

காக்கைக் கூட்டைக் கண்டுவந்து
கருதிக் குயிலும் முட்டையிடக்
காக்கை அதனை அடைகாத்துக்
கருத்தோ டிருந்து பார்ப்பெடுத்து

மூக்கில் இரையைக் கொடுவந்து
முன்னந் தனது பார்ப்போடு
முளையாச் சிறகுக் குயிற்பார்ப்பை
முனைப்புற் றூட்டி வளர்த்திருந்து

காக்கும் அழுந்தூர்க் கவிச்செல்வா!
கனிவாய் முத்தம் தருகவே!
கன்னித் தமிழில் வடகதைசொல்
கனிவாய் முத்தம் தருகவே

## முத்தப் பருவம்

பாடல் - 6

தளவம் புரையெம் தவள எயிற்றின்
தகைமைக் குடைந்த, கடலின்
தரங்கற தருவெண் டரளமும் கொள்ளேம்;
ததர்கொள் மலர்கள் அணியெம்

அளகஞ் செறிந்த அருநிற மஞ்சி
அலைவு மிகுந்த முகிலும்
அளிக்கும் பணிவெண் டரளமும் வெஃகேம்;
அணிகொள் டணைத்தோட் குடைந்து

குளகக் கவியின் வளர்கழை முத்தைக்
குறியேனம்; இனிக்கு மெஞ்சொற்
கொளுநற் சுவையிற் குடைகழை முத்தைக்
குறித்திங் கெதுவும் புகலேம்;

களபந் திகழும் மணிதிகழ் மார்பா
கனிவாய் முத்தம் அருளே!
கமுகின் கன்னல் வளரமுந் தூர
கனிவாய் முத்தம் அருளே

பாடல் - 7

கொண்டல் முழங்கிக் குவிக்கும் முத்தும்,
குறுங்கண் கழையீன் முத்தும்,
குளிர்வெண் பணிலம் குவிக்கும் முத்தும்,
கொழுந்தா மரையின் முத்தும்,

வண்டல் வயல்நெற் கதிரின் முத்தும்,
வளர்வேய் வெடித்தீன் முத்தும்,
வழைய னடியில், கதலித் தூரில்,
வரம்பல், குரம்பில், சாலில்,

கண்டல் அடிக்குள வதிந்தே நந்து
கருதி இடுநன் முத்தும்,
களமர் சிறுவர் முகந்து வந்து
கடைமுன் பரப்புங் காட்சி

கண்டின் புறுங்கற் கண்டின் மொழியோய்
கனிவாய் முத்தம் அருளே!
கமுகின் கன்னல் வளரமுந் தூர
கனிவாய் முத்தம் அருளே

பாடல் - 8

மங்கை கழுத்தின் வடிவைப் பழித்து
வளர்ந்தே உயர்ந்த கமுகு
வடிகுலைப் பசுங்காய், வளமை மஞ்சள்
வண்ணம் அடைந்தி ராமன்

அங்கை, அகல்கண், அடிகள், உரிய
அளவின் அமைந்த இதழ்கள்
அமைவுறச் சிவந்து திகழ்தல் அனைய
அழகின் பழுத்துப் பொலியத்

தங்குங் கிளிகள் தமக்குக் கோவை
தருநற் கனியென் றெண்ணித்
தலையுறும் அலகாற் கதுவக் காய்போல்
தலைகள் தயங்குங் காட்சி

கங்கி லிருந்து கண்ட வியப்போய்
கனிவாய் முத்தம் அருளே!
கமுகின் கன்னல் வளரமுந் தூர
கனிவாய் முத்தம் அருளே

## முத்தப் பருவம்

பாடல் - 9

நாமுறு கலை ஆடையி னுடீஇய
நனிமிகு தொன்மை உலகில்
நால்வகை நிலத்தின பால்வகை நிறீஇய
நலமெழு நம்முன் அறிவர்

ஆமுறு செழுநா அசைவுற எழீஇய
அழகுறும் செம்மைத் தமிழில்
ஆகிடும் கடல்நூற் பாகினை அளைஇய
அறிவினர் பின்னோர் சுவைக்க

ஏமுறு மனத்தொ டியற்றினர் தரீஇய
இலக்கண இலக்கியம் அயின்றோர்
யாம்பறு இன்பம் யாவரும் பெறீஇய
ரெனச்சொலும் தமிழின் மரபைக்

காமுறு புலவ தோமறு மொழியோய்
கனிவாய் முத்தம் அருளே!
கமுகின் கன்னல் வளரமுந் தூர
கனிவாய் முத்தம் அருளே

பாடல் - 10

முன்னைப் பழைமைக் கொருமுதுப் பழமை
முதிரும் முதன்மைப் பொருளாய்,
மொழியும் புதுமைக் கொளிதரு புதுமை
முகிழ்க்கும் மும்மைத் தமிழாய்த்

தென்றற் பொதியில் திகழ்வான் மதியாய்த்
திருமால் வடபாற் குன்றம்
தெற்கில்.குமரி ஆயிடைத் திகழ்ந்து
செங்கோ லாட்சி சிறந்த

மன்னர் மூவர் மடிவளர் மகளாய்
மறையோர் இறையோர் எவரும்
மடிதற் றெழுந்து பணிசெய மகிழ்ந்து
மகவொரு நான்கு மீன்ற

கன்னித் தமிழின் இன்சொற் கிள்ளாய்
கனிவாய் முத்தம் அருளே!
கமுகின் கன்னல் வளரமுந் தூர
கனிவாய் முத்தம் அருளே.

## 6. வருகைப் பருவம்

பாடல் – 1

நாமந் தருபேர் மலையிழிந்து
நானா வகைய மணியோடும்
நத்தும் பொன்னின் துகளோடும்
நடன மயிலின் பீலியொடும்

வாமக் களிற்றுக் கொம்போடும்
வயிரக் கள்ளி அகிலோடும்
மணத்தின் மிக்க சந்தோடும்
மலரின் தாதுத் தேனோடும்

ஏமந் தருநற் பொருளின்னும்
யாவை உளவே அவைவாரி
ஏம்பல் மிக்க வணிகர்போல்
ஏதம் நீக்கிப் பரந்துவரும்

காமர் பொன் சூழமுந்தூர்க்
கம்ப நாடா வருகவே!
கட்டுத் தறியும் கவிபாடும்
கம்ப நாடா வருகவே

## வருகைப் பருவம்

பாடல் - 2

வளருஞ் செந்நெற் பயிர்பேணி
வளைந்த கதிரின் நிலையுணர்ந்து
வரிப்பல் குயத்தா லரிந்தெடுத்து
வயலின் களத்திற் கட்டடித்தார்

அளவின் மேரு நெற்குன்றம்
அமைய, அரியைப் போரிட்டார்
அதனைப் பரப்பிக் கடாவிட்டே
அடையம் நெல்லில் ஒருபங்கை

உளமும் மகிழ இரவலர்க்கும்
உடனீந் துவந்தார் பொதியேற்றி
உருக்கொள் பண்டி மனைசெலுத்தி
உழுதுண் வாழ்வே உயர்வென்னும்

களமர் குழுமும் திருவழுந்தூர்க்
கம்ப நாடா வருகவே!
கட்டுத் தறியும் கவிபாடும்
கம்ப நாடா வருகவே

பாடல் - 3

நாட்கொள் போது நிறைகூந்தல்
நறவும் நாணும் இன்றீஞ்சொல்
நவ்விக் கண்ணின் மருதியர்தாம்
நடந்து செல்லும் நடையழகை

வேட்புற் றன்னம் பின்றிரிய
விரிந்த நளினப் பள்ளியிடை
மேவி வளரும் இளம்பிள்ளை,
மேயும் மேதி கன்றுள்ளிக்

## வருகைப் பருவம்

கோட்பின் விளித்துச் சோர்பாலைக்
குளிர்நீர் நீக்கிப் பருகியதும்
கூடும் அரிய துயில்கொள்ளக்
குலவும் தேரை தாலாட்டும்

காட்சி வளரும் திருவழுந்தூர்க்
கம்ப நாடா வருகவே!
கட்டு தறியுங் கவிபாடும்
கம்ப நாடா வருகவே

பாடல் - 4

புயலைத் தாக்கிப் பொருதெங்கு,
புறக்காழ் பொதியுங் கரும்போந்தை
பொருந்து பாளை அரிந்துவிடப்
பொங்கிக் கலயம் வழிதேனும்,

துயலுங் கொம்பிற் கனித்தேனும்,
தூங்கு தாற்றின் கனித்தேனும்,
தொடையி னிழியு மிறால்தேனும்,
துலங்கும் ஆலைக் கழைத்தேனும்

மயங்கிச் சேர்ந்து வரம்போட
வாளை கெண்டை கயல்கெளிறு
வராஅல் உளுவை மண்டூகம்
வாய்வைத் தருந்திக் களிதூங்கும்

கயங்கள்வயங்கு திருவழுந்தூர்க்
கம்ப நாடா வருகவே!
கட்டுத் தறியுங் கவிபாடும்
கம்ப நாடா வருகவே

## வருகைப் பருவம்

பாடல் – 5

குளிர்வெண் பணிலம் உலவிவரக்
குவியும் முத்து வரம்பெல்லாம்,
கோவைக் கனியி னீட்டத்தாற்
கூரும் பவளம் பரம்பெல்லாம்,

நளிர்கொள் நீரிற் கலந்துவந்து
நண்ணும் செம்பொன் குரம்பெல்லாம்,
நற்பால் வண்ணச் சிறகன்னம்
நாடுஞ் சாலிப் பரப்பெல்லாம்,

துளிர்கள் தழைய மலர்தழையச்
சோரும் செந்தேன் கரம்பெல்லாம்,
தோகை ஓகை கொண்டாடத்
தூங்க லோசை காவெல்லாம்,

களிவண் டீண்டும் திருவழுந்தூர்க்
கம்ப நாடா வருகவே!
கட்டுத் தறியும் கவிபாடும்
கம்ப நாடா வருகவே

பாடல் – 6

நெளிக்கும் தோகை திரந்திருக்க
நின்ற தெங்கின் அரிபாளை
நிறைக்கும் நறவைப் பதனறிந்து
நேடி இறக்கி நெய்யரியால்

புளிக்கும் முன்னர் வடிகட்டிப்
புதிய தெளிவைப் பனைதந்த
பொருந்து பசிய குடைநிறையப்
புரிந்தே யூற்றி உழையாளர்க்

களிக்க அவரும் அதைப்பருகி
அகமும் முகமும் மலர்ந்தென்று
அதனைக் கண்டு தாம்பருகி
அளவ ளாவித் தம்மகமும்

களிக்குங் களமர் வாழமுந்தூர்க்
கம்ப நாடா வருகவே!
கள்ளின் சொல்லாற் கவியளித்த
கம்ப நாடா வருகவே

பாடல் – 7

நீலக் கடல்சூழ் இவ்வுலகில்
நெருப்புக் கோளின் வெப்புற்று
நெறிபட் டொவ்வாப் பொறியுற்று
நீடுந் தூசி அடையுற்றுக்

காலம் விளைத்த ஒருகருங்கல்
கருதா ரின்றி வழிகிடக்கக்
கண்டு நினைந்து கைக்கொண்டு
கனத்துப் படிந்த துகளகற்றிக்

கோலம் விளைத்து வடிவமைத்துக்
கோடி நுணுக்கங் குலவிவரக்
கோயிற் கடவுட் படிமத்தைக்
குறித்துப் பொளியும் ஓசையொடு

காலங் குலவும் திருவழுந்தூர்க்
கம்ப நாடா வருகவே!
கட்டுத் தறியும் கவிபாடும்
கம்ப நாடா வருகவே

## வருகைப் பருவம்

பாடல் - 8

எண்ணெய் தேய்த்துக் குளிப்பதற்கோ
எந்தாய் உன்னை இனியழையேன்!
எண்ணெய் கண்ணுக் கினிக்கட்டேன்!
ஏதுங் கசப்பு மருந்தூட்டேன்!

மண்ணிற் புரண்ட தேனென்று
மறந்தும் என்றுங் கேளேனே!
வாயில் வடியும் நறுந்தேனை
வழித்துத் துடைக்க இனிக்கருதேன்!

விண்ணின் நிலவை வேண்டினையோ?
மின்னும் உடுக்கள் விரும்பினையோ?
வெறிதே கண்ணைக் கசக்குவதேன்?
விம்மிப் பொருமல் உனக்கழகோ?

கண்ணிற் குவளை மலரவரும்
கம்ப நாடா வருகவே!
கட்டுத் தறியும் கவிபாடும்
கம்ப நாடா வருகவே

பாடல் - 9

சாலிக் கதிர்செந் தாமரையில்
சாய்ந்து தொங்குஞ் சால்வொப்பத்
தங்கச் சுட்டி பட்டமொடு
சாந்துப் பொட்டில் பட்டாடத்

தாலி ஐந்து படைதழுவிச்
சந்த மார்பில் தழைத்தாடத்
தயங்கு மகரக் குழையாடத்
தனித்த வலயம் கைக்கடகம்

ஆலித் திருக்க அரைஞாணில்
அசையும் மணிகள் சலசலக்க
அடிகொள் சதங்கை கிண்கிணியும்
அம்பொற் சிலம்பு மென்றண்டை

காலிற் செறிந்து கலகலக்கக்
கம்ப நாடா வருகவே!
கட்டுத் தறியும் கவிபாடும்
கம்ப நாடா வருகவே

பாடல் – 10

வடசொற் கடலின் வரைகண்ட
வசையில் யை வருக, தமிழ்
வளமுங் கடந்தோய் வருக,உரு
வரையோ வியமே வருக,அழற்

புடமிட் டெடுத்துப் பழங்கதையைப்
புதுக்கும் புலவ வருக,புகழ்
பொதிந்த மெய்யே வருக,புரை
பொருந்தாக் குணனே வருக, மொழி

சுடர்கொள் நாவின் நயமுரைக்கும்
சொல்லின் செல்வ வருக,மறுத்
தொடரா மனனே வருக, ஒளி
துலங்கும் மதியே வருக, அலை

கடலின் நெடிது கற்றுயரும்
கம்ப நாடா வருகவே!
கட்டுத் தறியும் கவிபாடும்
கம்ப நாடா வருகவே

## 7. அம்புலிப் பருவம்

பாடல் - 1

ஆதித்தன் அருள்செய்ய அருங்கலைகள் நிறைவுபெற
அணைமுழு மதியு றுதலால்
அகிலத்தார் உவப்படைய ஆரிருளும் இரிந்தோட
அழகுற ஒளித ருதலால்

ஆதிக்கஞ் செல்கின்ற அரங்கொன்றைத் தனக்கென்றே
அமைத்தவண் நிலைபெ றுதலால்
அணிசெய்யும் புலிக்கொடிவிண் ணசைந்தாடும் வளவனவன்
அவையனிற் பொலிவு றுதலால்

யாதிக்கும் உறைபவர்கள் ஏமுற்றுப் போற்றிடவே
இசையொடு துதித்தி டுதலால்
யாவரையும் ஈர்க்கின்ற பாவரையும் இவண் நிற்கும்
இயைந்தநற் றுணையினன்காண்

ஆதித்த குலமகனின் அடலுரைக்கும் புலவனுடன்
அம்புலி யாட வாவே!
அழகுதவழ் திருவழுந்தூர் பழகுதமிழ்க் கம்பனுடன்
அம்புலி யாட வாவே!

பாடல் - 2

இரக்ககுணச் சிறப்பியல்பன் எழிற்கங்கைக் கரையுடையான்
இணையிலா அன்பு கொண்டோன்
ஏற்றமிகும் உருவுடையான் எதிரில்லா வலிமையுறும்
எழிற்குகன், விலங்கி யல்புக்

குரக்குநிலைக் குரிசிலவன் கிட்கிந்தைக் குரியவனாய்க்
கொடுமையுற் றலைந்து பின்னர்க்
கோனாட்சி தான்பெற்ற வாலிதம்பி, வளைவிளையும்
குளிர்கடல் சூழி லங்கை

அரக்கர்குலத் தண்ணலவன் அண்ணன்வழி அகன்றுவரும்
வீடணன் ஆகி யோரை
அண்ணலொடு நண்பாக்கி அகங்கனிந்து மகிழ்ந்தனன்காண்
ஆதலின் நினைவி ழைவான்

அரசுரிமை துறந்தவனைப் பரசிடுமிப் புலவனுடன்
அம்புலி யாட வாவே!
அழகுதவழ் திருவழுந்தூர் பழகுதமிழ்க் கம்பனுடன்
அம்புலி யாட வாவே!

பாடல் - 3

உன்நிலவல் ஒளிதந்தே உலகளப்பாய்! பயிர்க்குலமும்
உயிர்க்குலமும் ஓங்க வைப்பாய்!
ஒருமீனும் உடனுறைய உடுக்குலமும் சூழ்ந்துவர
உலவிநீ உயர்ந்தி ருப்பாய்!

தன்கவியாற் களிதந்தே உலகளப்பான், தமிழ்ப்பயிரும்
மன்னுயிரும் தழைய வைப்பான்,
தனிச்சுவையன் உடனுறையத் தமிழ்ச்சுவைஞர் சூழ்ந்திருப்பத்
தலைநிமிர்ந் துயர்ந்தி ருப்பான்,

இன்பமிகு தென்றலாடும் உன்னோடும் பிறந்து வளர்ந்
தெழில்நிறைந் திலங்கு கின்ற
என்றுமுள தென்றமிழை இயம்பியிசை கொண்டிலங்கும்
அவன்நினக் கிசைந்த வன்காண்

அன்னமொடுங் கானடைந்தோன் அழகியம்பும் புலவனுடன்
அம்புலி யாட வாவே!
அழகுதவழ் திருவழுந்தூர் பழகுதமிழ்க் கம்பனுடன்
அம்புலி யாட வாவே!

## அம்புலிப் பருவம்

பாடல் - 4

கலைமதி நீயென வினைத்தொகைப் பொருளொடும்
கழறுவ துணர்கி லையோ!
கவினழந்த தொவ்வொரு திங்களும் ஒருநாள்
கட்படா தொளிகு வையே!

கலைபயில் தெளிவொடு கட்டுரை வன்மைகொள்
கற்பனை வளமு டையான்,
கல்வியிற் பெரியனெக் காலமும் ஒளிர்குவன்,
கருவிலே திருவு டையான்

குலைமதி அடைந்தனை, நிலைமதி அடைந்தனன்,
குவலயம் உனைம றைக்கும்;
குலவிடும் இவனுடன்; கோமகற் கொப்பெனக்
கூறிடத் தகுதி யில்லாய்,

அலைமகள் கொழுநனின் நிலையுரை இவனுடன்
அம்புலி யாட வாவே!
ஆர்வலர் சூழமுந் தூர்வளர் கம்பனொ (டு)
அம்புலி யாட வாவே!

பாடல் - 5

ஏழிரு கலையொடொன் றுடனிவண் நிலவாய்
நிலவாய் எனவு ணர்வாய்
எண்ணெென் கலைகொளும் யாப்புக் கலையொடு
நிலவாய் இலங்கு கின்றான்

சூழிரு ளகத்தொடு சுடர்விட் டுலவிச்
சுழலுதல் நின்வ ழக்கம்,
தூயநல் லகத்தொடு சுடர்முகம் பொலியத்
துலங்குதல் இவன்ப ழக்கம்,

பூழியர் குலத்தவ ரேயுனைப் போற்றுவர்
புவியிடை இவற்பு கழ்ந்து
போற்றா தவரிலர், புதுமையன் இவற்குநீ
பொருந்துமா றறிய கில்லோம்

ஆழிகொள் நெடுங்கை அழகனைப் புகழ்வனொ
டம்புலி யாட வாவே!
ஆர்வலர் சூழமுந் தூர்வார் கம்பனொ
டம்புலி யாட வாவே!

பாடல் - 6

இரவலர் காவலர் ஏற்றிட வருவாய்!
இரவுக் கெழுகு வைநீ!
எழுந்தே வளர்வாய் விழுந்தே தளர்வாய்!
இழிவெண் மதியு டையாய்!

புரவலர் இரவலர் போற்றிட வருவான்,
புதுப்பொருள் ஈந்து வப்பான்,
பொருளும் அணியும் புனைந்திவன் பொலிவான்
பொதிசெம் மதியு டையான்,

உரமலர் விரிந்தவற் கொருவகை யானும்
ஒப்பிலாய் எனவு ணர்த்தும்
உனையிவன் அழைத்ததும் உன்பெறும் பேறென
உன்னுக முன்னி னைந்தே!

அரமெனக் கூர்மதி உரம்பெறும் இவனுடன்
அம்புலி யாட வாவே!
ஆர்வலர் சூழமுந் தூர்வளர் கம்பனொ
டம்புலி யாட வாவே!

## அம்புலிப் பருவம்

பாடல் - 7

வான்மதி! முழுமதி எனவரின் சனகியின்
வாண்முகச் செவ்வி யீவன்,
வளர்மதி எனவரின் வடிவுறும் அன்னவள்
வாணுதல் ஒப்பு விப்பன்,

கூன்மதி யாய்வரின் கோவில் லாக்கிக்
குவவுறும் அழக னின்தோள்
குலவிட வைத்தவன் நிலவிடச் செய்துநின்
கொட்புறும் நிலைத விர்ப்பான்,

தோன்றிய புகழொடு தோன்றிய தோன்றலைத்
தொழுதிட வருகு வையேல்
தொலைவிலாப் பெருமையும் தொழுதகு நிலைமையும்
துதைந்திடப் பெறுகு வையே!

ஆன்றநற் புதுமைகள் சான்றவிப் புலவனொ
டம்புலி யாட வாவே!
ஆர்வலர் சூழமுந் தூர்வளர் கம்பனொ
டம்புலி யாட வாவே!

பாடல் - 8

தண்ணளி சுரந்தருள் வெண்ணெய்நல் லூர்வளர்
சடையனை உவந்து வந்து
தன்மனம் அளித்தனன், நவில்தொறும் நவில்தொறும்
தகைமிகு நன்றி தந்தான்,

பண்ணவன் இக்கம்ப நாடுடை வள்ளல்போல்
பாரிடை வள்ள லில்லை,
பாரியை நிகர்த்திடும் மாரியின் மேலதாப்
பாரிக்கும் தன்மை கொண்டான்;

கண்மணி யிவனுடன் விண்வெளி யிழிந்துநீ
கனிவொடு கூடி நின்றால்
காரணி கொடையினன் ஆதலின் நிற்கொரு
காப்பியம் படைத்த ளிப்பான்

அண்ணிய பேர்க்கெலாம் பண்ணளிப் பானுடன்
அம்புலி யாட வாவே!
ஆர்வலர் சூழமுந் தூர்வார் கம்பனொ
அம்புலி யாட வாவே!

பாடல் – 9

எல்லைநீத் திருக்கவும் செருக்குறு மதியாய்
மதியாய் இவன ழைப்பை!
எல்லினைப் பழமெனப் பற்றிய மாருதி
இவனுழை இருந்தி டல்காண்!

செல்லுனை விழுங்கிடுந் திறமுணர்ந் திருப்பினும்
திருந்திலை! இவன்தி ருக்கைச்
செல்லினைக் கருதிலை! சிவப்புறுங் கண்ணவன்
சீறியே அதையெ றிந்தால்

வல்விரைந தேகுமோர் கணையென வந்துனை
வருத்திடும் நிலையு ணர்வாய்!
வானவர் வானரர் தானவர் யாரையும்
வரிக்குளே அடக்கி னன்காண்!

அல்லியுங் குவளையும் புல்லிடும் ஊரனொ
டம்புலீ யாட வாவே!
ஆர்வலர் சூழமுந் தூர்வளர் கம்பனொ
டம்புலீ யாட வாவே!

பாடல் - 10

இராவணன் நீயிவன் அழைப்புக் கிணங்கா
திருத்தலில் வியப்பி லைகாண்!
இவனுறு பொறுமைக் கெல்லையான் றுண்டென
எண்ணுக! உள்நி னைந்தால்

இராவணன் செய்யுமிவ் வெறுழினன் சுவடொற்
றெழில்கவி படைப்ப வர்கள்
எள்ளள வாகிலும் இடந்தர இசையார்,
இராவணம் கொண்டு ழல்வாய்!

இராவணன் வீழ்ச்சியம் இராகவன் ஆட்சியும்
இக்கவி மாட்சி மையாம்!
என்னினிப் புகல்வதோ? உன்நிலைக் கிரங்குவல்!
ஏதினிப் புகலி டஞ்சொல்?

அராபதம் முரல்பொழில் விராவிடும் நாடனொ
டம்புலி யாட வாவே!
ஆர்வலர் சூழமுந் தூர்வளர் கம்பனொ
டம்புலி யாட வாவே!

## 8. சிற்றிற் பருவம்

பாடல் - 1

கோடி யடுவிற் கொளிகொடுத்த
குருவெண் முத்தால் எயிலெழுப்பிக்
கோட்டை யமைத்துக் குடிபுகுந்து
குறுவாய்ப் பணிலக் கலமிட்டுத்

தேடித் தேனை உலைநீராத்
தேக்கி முத்துப் பைஞ்சாலித்
தேன்சோ றடுமோர் கவனத்தால்
செல்வா! வரத லறியாது

கூடி யமர்ந்தோம் அதுவன்றிக்
கூடுஞ் செருக்கா லமரவிலை!
கோடா மனத்தாய் அதற்காகக்
கூருஞ் சீற்றப் பார்வையொடும்

ஆடிப் பெருக்குப் போல் விரைந்தாய்?
அடியேம் சிற்றில் சிதையேலே!
அழுந்தூர்த் தோன்று பெருங்குணனே
அடியேம் சிற்றில் சிதையேலே

பாடல் - 2

காசிப் பட்டுக் கஞ்சுகந்தான்
கனக்கு மென்று கைவிட்டுக்
காஞ்சிப் பட்டு மெய்யணிந்து
கண்ணிற் கரிய மையெழுதி

மாசில் மாவின் கனிநாடி
வண்டு துளைத்த மறுப்போல
வண்ணக் கன்னம் மையிட்டார்
வருங்கண் ணேறு கழிதற்கே!

தூசில் தூசி தோயாமல்
தோழர் துணையா ஆடென்று
சொல்லி அன்னை உனைவிடுத்தார்
சொல்லை மீறி இவண்வந்தாய்

ஆசி கூறி அருளாயோ?
அடியேம் சிற்றில் சிதையேலே!
அழுந்தூர்த் தோன்று பெருங்குணனே
அடியேம் சிற்றில் சிதையேலே

## சிற்றிற் பருவம்

பாடல் - 3

வள்ளல் இராமன் காடாள
மைந்தன் பரதன் நாடாள
வரங்கள் பெற்ற கைகேயி
வடித்த சிற்றி லீதென்றோ

உள்ளங் கொண்டாய் சிதைத்தற்கே?
உனக்கும் ஐயம் வரலாமோ?
உருத்துப் பார்த்தல் ஒவ்வாதே!
உரைநூற் கிடைக்கை உணர்ந்தோயே!

எள்ளற் செய்கை இழைப்பாயோ?
எம்மோ டிணைந்தே யாடாயோ?
எற்று முன்றாள் நோவாதோ?
ஏழை எமக்கே இரங்காயோ?

அள்ளுஞ் சுவைசேர் நூலளித்தோய்
அடியேம் சிற்றில் சிதையேலே!
அழுந்தூர்த் தோன்று பெருங்குணனே
அடியேம் சிற்றில் சிதையேலே

பாடல் - 4

கொள்ளுஞ் சுவையா றுடனமுது
கூட்டி வைத்துச் சமைத்துள்ளோம்;
கோமான் உனக்கும் விருந்தளிக்கக்
குழுமி நிற்கும் எங்களுக்கு

விள்ளுஞ் சுவையோ ரெட்டுள்ளும்
வீரச் சுவையில் நீமிக்கு
வெருவும் அச்சச் சுவையோடு
விரும்பா அழுகைச் சுவையூட்டி

## சிற்றிற் பருவம்

உள்ளம் உவகைச் சுவைபெறவோ
ஓடி வந்த நிற்கின்றாய்?
உன்றாள் பரலி லுறலாமோ?
ஒன்னார் செயல்நீ செயலாமோ?

அள்ளிக் கொள்ளும் அழகோனே
அடியேம் சிற்றில் சிதையேலே!
அழுந்தூர்த் தோன்று பெருங்குணனே
அடியேம் சிற்றில் சிதையேலே

பாடல் - 5

அட்டிற் புகையோ கார்படைக்கும்!
அரிசி கழையுங் கழுநீரோ
அஞ்செங் கழுநீர் மலர்படைக்கும்!
அமுதின் கஞ்சி யாறாகி

மட்டில் வயலின் பயிர்படைக்கும்
மலர்கள் சேர்ந்து தொடைபடைக்கும்!
மகர யாழை அளிபடைக்கும்!
மடிமை காணாத் தேனீக்கள்

மட்டு நாடிக் கிளைதோறும்
வளரும் பிறைபோல் இறால்படைக்கும்!
மாட்சி கண்டு நூல்படைத்து
வழங்கி நின்ற பெருவள்ளால்

அட்டற் செயல்நிற் கழகாமோ?
அடியேம் சிற்றில் சிதையேலே!
அழுந்தூர்த் தோன்று பெருங்குணனே
அடியேம் சிற்றில் சிதையேலே

## சிற்றிற் பருவம்

பாடல் - 6

சொல்லுஞ் சொல்லை வெல்லுஞ்சொல்
தோன்ற லின்றிச் சொல்கின்ற
சொல்லும் வல்ல இராகவனும்
தொடரும் இளவல் இலக்குவனும்

நல்ல தவத்துக் கோசிகனார்
நயந்த வேள்வி காத்தற்கு
நடுக்கான் நின்றே அதுமுடித்தார்
நடந்தம் மூவர் மிதிலைக்குச்

செல்லும் வழியில் ஒருகல்லும்
செம்மல் இராமன் கால்பட்டுத்
தெரிவை யான கதையதனைக்
செப்பும் நீயோ சிறுமியார்பால்

அல்லல் இழைக்க இருகுற்றாய்?
அடியேம் சிற்றில் சிதையேலே!
அமுந்தூர்த் தோன்று பெருங்குணனே
அடியேம் சிற்றில் சிதையேலே

பாடல் - 7

கருமை மேதி கன்றுள்ளிக்
கனத்த குரலான் தான்முழுங்கக்
காற்றி லேறும் அம்முழக்கும்
காயஞ் சாடிக் காருடைக்கும்,

பருவ மேகம் மழைபடைக்கும்,
பாயும் வெள்ளம் மடையுடைக்கும்,
பாவும் தென்றல் அரும்புடைக்கும்,
பரிய பொகுட்டைச் சுரும்புடைக்கும்,

உருவ வோம் இறாலுடைக்கும்
ஒற்றைக் கதிர்நெல் உழக்குடைக்கும்,
ஒப்பில் கட்டோ கலமுடைக்கும்
ஊர! சிற்றில் உடைப்பாயோ?

அருமை படைக்கும் சோணாடா
அடியேம் சிற்றில் சிதையேலே!
அழுந்தூர்த் தோன்று பெருங்குணனே
அடியேம் சிற்றில் சிதையேலே

பாடல் – 8

என்பைத் தோலே போர்த்திருக்கும்
இழிந்த உடலைக் கொண்டுலவி
இயற்கை அறிவும் இல்லாமல்
எண்ணம் போகும் போக்கேகும்

வன்பு மனத்தள மறம்புக்கு
வடித்த பாவப் பெருவீட்டை
வளரும் அறம்தன் கால்கொண்டு
வலிந்தே அழித்தல் வழக்கன்றோ!

அன்பே நிறைந்த நெஞ்சினரேம்
அமைக்கும் சிற்றில் அழிக்கவரல்
அறமோ? மறமோ? யாதுரையாய்?
அன்புற் றமர்ந்த வழக்கெதுவோ?

அன்பின் செவ்வி நனிகண்டோய்
அடியேம் சிற்றில் சிதையேலே!
அழுந்தூர்த் தோன்று பெருங்குணனே
அடியேம் சிற்றில் சிதையேலே

## சிற்றிற் பருவம்

பாடல் - 9

குளவி தன்வாய் நீரிட்டுக்
குழைத்த மண்ணாற் கோட்டையெனக்
கூட்டை அமைக்கும், சிதல்தன்வாய்
குழைத்த மண்ணாற் புற்றமைக்கும்

வளமைப் புதுமைக் கோசலத்தின்
மன்னர் மன்னன் தயரதனின்
மன்னும் உயிருக் குயிராக
வயங்கும் இராமன் கொலுவிருக்கக்

கிளவி என்னும் மண்கொண்டு
கிளைத்த விருத்த நீரளைந்து
கிளத்தற் கரிய காப்பியமாம்
கேழ்கொள் கோவில் உருவாக்கி

அளவில் புகழை அடைந்தோயே
அடியேம் சிற்றில் சிதையேலே!
அழுந்தூர்த் தோன்று பெருங்குணனே
அடியேம் சிற்றில் சிதையேலே

பாடல் - 10

பாட்டின் திறத்தால் பலர்புகழைப்
பாரிற் பரவா மற்சிதைத்தாய்
பலருள் பதிந்த அழுக்காற்றைப்
பண்புத் திறத்தால் நனிசிதைத்தாய்!

ஈட்டம் கெழுமும் ஆயிரமாம்
இராமர் புகழை நினதாக
ஈட்டிக் கொண்டாய்! எல்லாரும்
ஏற்கும் செயல்கள் பலபுரியக்

கோட்டி தோறும் புகழ்ந்தார்கள்!
கோதை எங்கள் சிறுவீட்டைக்
குலைக்கும் ஒன்றாச் செயல்கண்டால்
கூடி நின்று பழிப்பாரே!

ஆட்டி வைக்கக் கருதுவையோ?
அடியேம் சிற்றில் சிதையேலே!
அழுந்தூர்த் தோன்று பெருங்குணனே
அடியேம் சிற்றில் சிதையேலே

## 9. சிறுபறைப் பருவம்

பாடல் – 1

உதிக்கின்ற கதிரவனின் உருநிகர்த்த சூட்டுடைய
ஒண்சிறை வார ணங்கள்
உயர்குவையைச் சீக்கவொளி யுமிழ்கின்ற பன்மணியை
உலவுமின் மினிக ளெனவே

மதிக்கின்ற குருவியினம் வலியலகாற் பற்றியவை
மரந்தொறுந் தூங்கி யசையும்
வான்கூட்டுள் பதித்துவிட வரிசையுறத் தூங்குகிற
மணிவிளக் கெனத்தி கழவே

கதிர்க்கின்ற மாட்சியினாற் காரிருளாம் பகையகலக்
கழிமகிழ் வுயர டையவே
காவலுறு மன்றுதொறம் மேவலுறு தூண்டாத
கதிர்விளக் கெனப்பொ லியவும்

திதிக்கின்ற செய்கைவளர் திருவழுந்தூர் வளர்செல்வ
சிறுபறை முழக்கி யருளே!
தென்தமிழும் வடமொழியும் வந்துபணி செய்புலவ
சிறுபறை முழக்கி யருளே

## சிறுபறைப் பருவம்

பாடல் - 2

வைகறையில் எழுகதிரை வரவேற்க வாரணங்கள்
வலியதஞ் சிறக சைக்கும்
மனத்திலுறு களிபொங்க இனத்தினொடு தம் வாயால்
வருகென வாழ்த்தி சைக்கும்

மைகவரும் விழியினரும் மலர்மஞ்சந் துயிலுணர்ந்து
மலர்விழி மலர்ந்தெ ழுந்து
வாயிற்கு நீர்தெளிக்க வரச்சிலம்பின் ஒலி முழக்கும்
வளத்தரை கோல மிடவே

கைகவரும் வளைமுழக்கும் கறவையினம் கன்றுள்ளிக்
கடம்படு குரல்மு ழக்கும்
கன்றுகளும் பால்பருகக் கருதித்தம் தாயுள்ளிக்
கனைமிகு குரல்மு ழக்கும்

செய்கவரும் நீர்முழக்கும் செறியமுந்தூர் வளர்செல்வ
சிறுபறை முழக்கி யருளே!
தென்தமிழும் வடமொழியும் வந்துபணி செய்புலவ
சிறுபறை முழக்கி யருளே

பாடல் - 3

வாக்குயர்ந்த வள்ளலிடம் நீக்கரிய காமமுறும்
வலியவள் உருவொ ளித்து
வஞ்சியென நஞ்சமென வஞ்சமனக் கதிர்வல்லி
வருகுவ தெனவ டைந்து

நோக்கறிந்து கொள்ளாமல் ஊக்கமுட னுரையாட
நொறுங்கிய தவளி னெண்ணம்
நூக்கரிய ஆசையினள் தாக்கணங்காய்த் திரும்பிவர
நுவலரும் இளைய சிங்கம்

மூக்கரிந்து விட்டுவிட மொய்ம்பழித்த சூர்ப்பணகை
மொழியுமப் புலம்ப லுக்கு
முன்னெழும்பும் ஓசைக்குப் பின்னெழும்பும் தாளவிசை
முறைமுறை முழக்கி வரவே

தீக்கொழுந்து மலர்க்கயங்கள் சேரமுந்தூர் வளர்செல்வ
சிறுபறை முழக்கி யருளே!
தென்தமிழும் வடமொழியும் வந்துபணி செய்புலவ
சிறுபறை முழக்கி யருளே

பாடல் - 4

ஆற்றலிலும் அறிவினிலும் அளந்தோத இயலாத
அழகனின் வலியி கழ்ந்தே
அரக்கியவள் உரைத்தபடி அவனோடு முனிவோடும்
அமர்செய முனைந்தெ ழுந்த

காற்றினிலுங் க்னலினிலுங் கடியானைக் கொடியானைக்
கரனெனும் பெயரி னானைக்
கணைதாங்கி வில்தாங்கிக் கைவாங்கித் தலைவாங்கிக்
களத்திடைப் புரள வைத்துக்

கூற்றுவனை வரவழைத்துக் குறையாத விருந்தாக்
கொடுத்தவக் குலக்கொ முந்தைக்
குழுமிவருந் தவமுனிவர் கொண்டாடிக் கண்டாடிக்
குழுமினர் முழக்க மிடவே

தீற்றுபுகழ் செவியேற்றுத் திருவழுந்தூர் வளர்செல்வ
சிறுபறை முழக்கி யருளே!
தென்தமிழும் வடமொழியும் வந்துபணி செய்புலவ
சிறுபறை முழக்கி யருளே

பாடல் - 5

தூயவினை புரிவார்க்குச் சூழ்பயனும் நன்றென்று
சொலுமொழி துலக்க முறவே
தொடர்வினைகள் இடர்தந்து படர்ந்துவரலில் லென்பார்
துகளற நுணித்த றிந்தார்,

மாயவினை புரிவார்க்கு மாயவினை உண்டென்னும்
வழக்கதும் வலிமை பெறவே
மாயவுரு மானாகி மாரீசன் விளையாட
மதவலி எழுது புகழான்

ஆயகணை ஒன்றெய்ய அம்மாய மாரீசன்
அகம்பதிந் துயிர்க வரவே
அலறுமவன் ஓலமதும் அண்டமெலாம் எதிரொலிக்க
அதற்கிசை அமைத்த படியே

தேயமெலாம் புகழ்பரவும் திருவழுந்தூர் வளர்செல்வ
சிறுபறை முழக்கி யருளே!
தென்தமிழும் வடமொழியும் வந்துபணி செய்புலவ
சிறுபறை முழக்கி யருளே

பாடல் - 6

எவ்வினை யாற்ற லேய்ந்த போதும்
இழிவுறு செயலைப் புரியின்
இளிவர லேற்றே இன்ன லெய்தி
இறுதியி லழிவ துறுதி;

நவ்வியின் நோக்கி தம்பி மனையாள்
நல்லெழி லுருமை வவ்வி,
நனந்தலைக் காடு தம்பி நாட
நலிவுகள் அவனுக் களித்த

வெவ்வினை வாலி வீறார் வேந்தன்
வியப்புறு வலிய னவனும்
வியன்கணை பாய்ந்து வீழ நெய்தல்
விளிபறை முழக்க மிடவே

தெவ்வினைத் தேய்க்கும் திருவழுந் தூர
சிறுபறை முழக்கி யருளே!
செவியுறு கேள்விச் செல்வக் கோவே
சிறுபறை முழக்கி யருளே

பாடல் – 7

நெய்யணி கூந்தல் நிலவொளி நெற்றி
நெறியறி பிணையின் விழிகள்
நிலவிடும் மங்கை மலர்முகம் கண்டு
நிறைநற விதழ்த்தா மரையும்

உய்வகை ஏதும் உறுவது காணா
தொருதனப் பதமொ டிருந்தே
உறுதவஞ் செய்ய இருகயற் குஞ்சும்
உடனெழுந் ததிலே உணர்த்தக்

கொய்யறு குமுதக் குவிமுகை, சாரைக்
கொடுந்தலை புரையக் கயலைக்
கொளுமென அஞ்சிக் குரங்குதன் கையைக்
குனிப்புற நெரித்தும் நொடித்தும்

செய்வினை மயங்கும் திருவழுந் தூர
சிறுபறை முழக்கி யருளே!
செவியுறு கேள்விச் செல்வக் கோவே
சிறுபறை முழக்கி யருளே

## சிறுபறைப் பருவம்

பாடல் - 8

திருவளர் பூவைக் சுரும்பினஞ் சேர்ந்து
தேனுகர் முழக்கொலியும்
தெளிபுன லாறு திகழலை மோதித்
திண்கரை பொருமுழக்கும்

உருக்கெழு கோவில் தருமுர சோங்க
ஒருகுழல் வளைமுழவம்
உயர்வகை மேளம் ஒருங்கிண நாத
சுரமுட னுறுமுழக்கும்

இருவினை ஆய்ந்தார் ஒருநெறி நிற்பார்
இசைத்திடு தமிழ்முழக்கும்
இருகைத் தாளம் எடுத்திடு மார்ப்பும்
எழுப்பொலி பிறக்கிடவே

முருகுயர் கையால் திருவழுந் தூர
முழக்குக சிறுபறையே!
முத்தமிழ்த் துறைதேர் உத்தமக் கவிஞ!
முழக்குக சிறுபறையே

பாடல் - 9

புகர்முக வேழம் புரையுநன் மேதி
புனலிடைப் புகுமுழக்கும்,
பொசுக்கென வாளை புரண்டெழுந் தாங்குப்
புறமெலாம் திரிமுழக்கும்,

தகர்கணு வேழப் பிழிவினை ஆலை
தருபொழு தெழுமுழக்கும்,
தனிச்சுவைச் சாறும் தழைத்தவண் ஆறாய்த்
தளிர்த்தெழும் அலைமுழக்கும்,

இகலுறு காளை எதிரெதிர் தோன்றி
இடியொடு பொருமுழக்கும்
இடமெலா மோங்க, இரவலர் ஏற்க
இடுபொருள் முழக்குறவே

முகமலர் பூக்கும் திருவமுந் தூர
முழக்குக சிறுபறையே!
முத்தமிழ்த் துறைதேர் உத்தமக் கவிஞ!
முழக்குக சிறுபறையே

பாடல் - 10

வகையுறும் எழுத்தும் வளவிய சொல்லும்
வாழ்வியல் தருபொருளும்
வரைவுறும் இலக்கண வரன்முறை ஓரார்,
வளமைகள் செறிந்தொளிரும்

தொகையுறு பனுவல் தொடுதலும் இல்லார்
துணிவொடு கவியெழுதித்
துளிர்த்தெழு தமிழிற் களைகளைப் பெய்து
சுழலுவர் புலவரெனப்

புகைமனத் தவராற் புகழ்தமிழ்த் தாயும்
புழுங்குவள் பொலிவிழந்தே
பொருந்தல ருள்ளப் புரையெனும் புட்கள்
பொருக்கென இரிந்தோட

முகைவிரி முறுவல் திருவமுந் தூர
முழக்குக சிறுபறையே!
முத்தமிழ்த் துறைதேர் உத்தமக் கவிஞ!
முழக்குக சிறுபறையே

# 10. சிறுதேர்ப் பருவம்

பாடல் - 1

மாரதங்கள் செலுத்துவதில் வல்லவனாந் தயரதனின்
மகவாப் பிறந்து வளர்ந்து
வரிவில்லில் தொடுகணையின கலைபயின்று துலங்குமொரு
வலத்தான் மழைநி றத்தான்

பாரதத்தில் தோன்றியவன் பலநீதி அறிந்தவொரு
பழையன் இராம னெழுந்து
பாரதஞ்செய் அரக்கர்வலி பறந்தோடச் செய்ததனைப்
பரிவோ டுரைத்த தமிழாம்

பாரதத்தில் வீற்றிருந்து, தாரணிந்த பார்வேந்தர்
பணிந்தே வரிசை தரவும்
பாவாணர் வாழ்த்துரைக்கப் பல்லாண்டு பலர்கூறப்
பவனிவரு பேர ரசனே,

தேரழுந்த லில்லாத திருவழுந்தூர் வருசெல்வ
சிறுதேர் உருட்டி யருளே!
செப்பரிய புகழ்த்தேரிற் செலவயரும் உயர்கம்ப
சிறுதேர் உருட்டி யருளே

பாடல் - 2

செப்புகிற சொல்லெல்லாம் சேர்ந்தறையும் ஆணியெனச்
செறிந்தே பொலிந்து மிளிரச்
சிதையாத அசையெல்லாம் சீரிழைத்த சட்டமெனத்
திகழ்ந்தே இணைந்து செறிய

ஒப்பரிய சீரெல்லாம் உயராரக் காலாக,
ஒன்றிய தளைகள் குடமா,
உருவாகும் தொடையாவும் உருள்கின்ற சக்கரமா,
உருக்கொள் அடிகு திரையா,

துப்புநிறை பொருளச்சா, துலங்கும்பா தேர்த்தட்டா,
தொகுத்தஅணி மணிக ளாகத்
துதைகின்ற சந்தமெனுந் தூவண்ணந் தீற்றிப்பின்
துகளறு மெருகு கூட்டிச்

செப்பமுறுங் காப்பியத்தேர் செலுத்துதிரு வழுந்தூர
சிறுதேர் உருட்டி யருளே!
செப்பரிய புகழ்த்தேரிற் செலவயரும் உயர்கம்ப
சிறுதேர் உருட்டி யருளே

பாடல் - 3

அறமழுங்கு மனத்தானின் அறமற்ற செயல்கடிந்தோன்
அளவிலா வலிமை அடைந்தோன்
ஆயினுந்தன் முன்னவனை அகலாதோன், வீடணனின்
அருமைத் தமையன் நெடிதே

உறங்குவதும் உண்ணுவதும் உடைக்கும்ப கன்னனோ
டுறுபோர்க் களம்பொ ருங்கால்
உத்தமனின் கணையைந்தால் உறுப்புவலக் கைமுன்னும்
உதவுமிடக்கை பின்னும்

குறங்குகளில் வலமுன்னும் இடம்பின்னும் குறைபட்டுக்
குருதியெனும் புனலி லுருளக்
குன்றனைய உடலுருளக் கொடிமுடிபோல் தலையுருளக்
குலைவுற் றரக்கர் உருளத்

திறமழுங்கா உழவர்சூழ் திருவழுந்தூர் வருசெல்வ
சிறுதேர் உருட்டி யருளே!
செப்பரிய புகழ்த்தேரிற் செலவயரும் உயர்கம்ப
சிறுதேர் உருட்டி யருளே

## சிறுதேர்ப் பருவம்

பாடல் - 4

வாரணங்கள் ஒரெட்டின் வலியடங்க மதமடங்க
வலிந்தே பொருத வுரமும்,
வளர்சிமய இமயத்தை வலம்வருங்கால் பெயர்த்தபெரு
வரைத்தோள் படைத்த வலியும்

நாரதனுக் கிசைநுட்ப நயம்யாவும் உரைநாவும்,
நயந்தே சிவன்த ருமொரு
நனிவலத்து வாட்படையும், நன்மணமே கமழ்கின்ற
நறியமலர் பலதொ டுத்த

தாரணிந்த முடிபத்தஞ் சரமொன்றாற் சிதறுண்ணச்
சரிந்தே இலங்கை யரசன்
தரைமகட்குப் புறந்தந்து சாயந்துருளத் தணவாத
தனிவீர முடனு ருளவே

சேரலரும் புகழ்பரவச் செய்ததிரு வழுந்தூர
சிறுதேர் உருட்டி யருளே!
செப்பரிய புகழ்த்தேரிற் செலவயரும் உயர்கம்ப
சிறுதேர் உருட்டி யருளே

பாடல் - 5

கள்ளமன வாளரக்கன் காமக்கண் பட்டவுடல்
களங்கம் அடைந்த தெனவே
கருதுபவர் இருப்பினவர் கருத்ததனை அகற்றற்குக்
கருதும் திறம்பா மனத்தன்

புள்ளிமயிற் சாயலினள் பூவைமொழிச் சானகியாள்
புகையும் எரியிற் புகுந்து
பொற்புடைய கற்பொளியைப் புவியோர்க்கும் கணவற்கும்
பொருந்தும் வகையி னிறுவ

எள்ளளவும் ஐயமிலா தேற்றுக்கொண்டி லக்குவனொ
டிலங்கை யகன்ற யோத்தி
எய்தற்கே இராகவனும் எழில்புட்ப கவிமானம்
இயக்கிவிசும் பூர்ந்த செலவைத்

தெள்ளுதமி ழேற்றிமகிழ் திருவழுந்தூர் வருசெல்வ
சிறுதேர் உருட்டி யருளே!
செப்பரிய புகழ்த்தேரிற் செலவயரும் உயர்கம்ப
சிறுதேர் உருட்டி யருளே

பாடல் – 6

அரியணையி னடிதாங்கி அனுமன் தான் சுமைகொள்ள
அரியின் குலத்து தித்த
அங்கதன்தான் உடைவாளை அங்கைகொள அரசுரிமை,
அண்ணனுக் குரிய தென்றே

அரியதவம் ஒருபதினான் காண்டுகளும் செய்பரதன்
அணிவெண் குடைக விக்க,
ஆருயிராம் ஈரிளவல் சீருயரும் கவரிகொள,
அடையாக் கதவம் உடையான்

விரிபுகழன் சடையப்பன் விழைமரபில் விருமொருவர்
மிளிர்பொன் மவுலி ஏந்த,
வேதஞ்சொல் வசிட்டன்தான் வீரற்குப் புனைகாட்சி
விழிகளாற் கண்டு மலரத்

தெரிதருபுன் னகையோடு திருவழுந்தூர் வருசெல்வ
சிறுதேர் உருட்டி யருளே!
செப்பரிய புகழ்த்தேரிற் செலவயரும் உயர்கம்ப
சிறுதேர் உருட்டி யருளே

## சிறுதேர்ப் பருவம்

பாடல் - 7

முன்மலர்நத தாமரையும் முகையவிழாச் செங்குமுதம்
முருகார் குவளை மலரும்
மொய்த்துவளர் கயத்துள்ளே முடுகிப்பாய் மேதியினால்
முனிவுறு வாளை வெடிபோய்த்

தென்னையிள நீர்க்குலையைத் தீண்டிடவும் அவ்விளநீர்
தெளிநீர்க் கயத்து ளுதிரத்
திடுக்குற்ற அம்மேதி திசைபார்த்துக் கரையேறத்
தெருளுற்ற வாளை மீன்கள்

பின்மகிழ்ந்து கயத்துகளப் பெருவளையின் வாய்நின்று
பிணைகால் பதித்த அலவன்
பேருவகை யொடுபார்க்கப் பின்னுந்து தவளைகளும்
பெரியா ராட்டி சைக்கத்

தென்றல்வளர் மருதவளஞ் சேரமுந்தூர் வருசெல்வ
சிறுதேர் உருட்டி யருளே!
செப்பரிய புகழ்த்தேரிற் செலவயரும் உயர்கம்ப
சிறுதேர் உருட்டி யருளே

பாடல் - 8

தொழுவோரின் உள்ளத்துள் துளும்புகிற பேருவகை
தொடர்ந்து நிலைபெற் றிலங்கச்
சுடர்கின்ற வன்கொழுவுந் தொளைக்கின்ற நிலத்தின்மண்
தொடிப்பு முதிகஃ சாகவே

உழுவோரான் உணக்கமுற உயர்தொழிலால் விளைபுலமும்
உறுநெற் கதிர்கள் பொலிய
ஊக்கமொட கதிரறுத்துந் தேக்குகளங் சூட்டடித்தும்
ஒளிக்கண் மருத மகளிர்

## சிறுதேர்ப் பருவம்

எழுந்தோகை முகம்பொலிய எவ்விடத்தும் நில்லாமல்
இவணவண் சுழன்று திரிய
எருத்தசைய அவர்போல இயங்கவுடற் கண்கயெலாம்
இமைத்த லிலவா யிருகச்

செழுந்தோகை மயிலாடுந் திருவழுந்தூர் வருசெல்வ
சிறுதேர் உருட்டி யருளே!
செப்பரிய புகழ்த்தேரிற் செலவயரும் உயர்கம்ப
சிறுதேர் உருட்டி யருளே

பாடல் - 9

செல்விருந்து பேணற்கும் வருவிருந்து காணற்கும்
செழிக்கும் மனத்து மகளிர்
செந்நெல்லைப் புழுக்கியதைச் செங்கதிரின் இளஞ்சூட்டில்
சிதறா துலரத்தி வரவே

இல்லிருக்கும் முன்புறத்தில் எழிற்சிறைய வாரணங்கள்
எளிதிற் கவர முயல
எழுந்தோச்ச எண்ணாமல் இருங்குழையைப் பறித்தோச்ச
இடத்திற் பரவு குழைகள்

நல்லிளைய சிறுவரெலாம் நடைபயிலுஞ் சிறுதேரின்
நடையைத் தடுத்து நிற்க
நலியுமவர் போலன்றி நன்னெறியை உண்ணினைந்து
நளியுங் குழைகள் உருளச்

செல்குழுமி வளஞ்செய்யுந் திருவழுந்தூர் வருசெல்வ
சிறுதேர் உருட்டி யருளே!
செப்பரிய புகழ்த்தேரிற் செலவயரும் உயர்கம்ப
சிறுதேர் உருட்டி யருளே

## சிறுதேர்ப் பருவம்

பாடல் - 10

பளிங்கதனாற் பாரமைத்துப் பவளத்தாற் காலமைத்துப்
பசும்பொன் முகடு வேய்ந்து
பலகோடி விண்மீனும் பளிச்சிடுதல் போல்வயிரம்
பதித்துக் கதிரை விழுங்கும்

மிளிர்வளரும் மரகதங்கோ மேதகம்புட் பராகமணி
மிடைந்து கதிர்வி ரிக்க
மின்னலுறு மாணிக்கம் கண்ணிலுறு போதெல்லாம்
வெங்கதி ரெழுந்து லாவ

நளிர்கடலில் விளைமுத்துள் ஒளிநீர்மை பலவாய்ந்து
நவையில் பரிய முத்தால்
நால்கின்ற மாலைகளை நூல்கொண்டு சுற்றியிட
நளினந் திகழ ழகுடன்

தெளிநுட்ப மதிக்கலைஞர் உளிகொண்டு யாத்துள்ள
சிறுதேர் உருட்டி யருளே!
செப்பரிய புகழ்த்தேரிற் செலவயரும் உயர்கம்ப
சிறுதேர் உருட்டி யருளே

101 பாடல் முற்றுப் பெற்றது.

## சாற்றுக்கவிதை

(நேரிசை வெண்பா)

நாச்சி குளத்தாரால் நற்றமிழும் வாழ்ந்ததெனப்
பேச்சுக்குப் பேச்சு, பெருமைகொள - மூச்செல்லாம்
செந்தமிழாய்க் கொண்டிலங்கும் சீர்க்கம்பன்
மீதுநண்பர் தந்திட்டார் பிள்ளைத் தமிழ்.

(வேறு)

கானடை இராமன் மீது காவியம் படைத்த தூய
ஞானமார் கம்பன் மேலே ஞாலமே புகழ நாளும்
தேனடை போல நல்ல தீந்தமிழ்க் கவிதை பாடும்
மீனவ நண்பர் சொன்னார் மேலான பிள்ளைப் பாட்டே.

பாட்டிலே சந்தங் கூட்டிப் பைந்தமிழ் இன்பம் காட்டி
ஏட்டிலே மணக்கும் நல்ல எழில்மிகு வளங்கள் ஊட்டி
தோட்டிலே வைர மாகத் துலங்கியே ஒளிர வைத்தார்
நாட்டிலே உள்ள நல்லோர் நாவினாற் புகழு தற்கே.

வானுயர் இராமன் மீது வண்டமிழக் கவிதை சொன்ன
ஊனமில் கம்பன் தன்னை உவப்புடன் பிள்ளை யாக்கித்
தானமும் தவமும் போலத் தமிழக்கவி நிலவ வைத்தார்
மானமும் மறமும் கண்ணா மன்னுசம் பந்த னாரே.

முத்தான காப்புப் பாட்டில் முன்னுயிர் எழுத்தைக் காட்டிப்
பத்தான பருவ மாகப் பைந்தமிழ்த் தேரைச் செய்து
சத்தான அம்பு லிக்கே சாபத்தை இட்டுச் சொன்னார்
வித்தான கவிஞ ரெல்லாம் விரிவாகப் புகழு தற்கே

புலவர் தெ. முருகசாமி M.A., B.O.L.,
முதல்வர், இராமசாமி தமிழ்க்கல்லூரி, காரைக்குடி

அறிவே தெய்வம் அறிவே எல்லாம்

# தவசிக்குதவிய தமிழ்மகள்

## திருமதி. இராஜாமணி அம்மாள் அவர்களுக்கு

(க.பெ.ந. உலகநாதத் தேவர்)

இந்நூலை
சமர்ப்பிக்கிறேன்

## குருநாதரின் வேண்டுகோள்

இந்நூலுக்குரிமை பெற்றுள்ள நாச்சிகுளத்தாரை 1950ல் ஆசீர்வதித்த குருநாதர் சுவாமி குக. சதாசிவ அடிகள் அன்றைய கால கட்டத்திலேயே விரும்பி கேட்டுக் கொண்டதிற்கிணங்க (கம்பருக்கு ஏதேனும் ஒரு சிறப்பு செய்) இந்த நூலை சகல ஏற்பாடுகளும் செய்து நூலாக்கிய தருணம் (2010ல்) அதே சுவாமி குக. சதாசிவ அடிகள் கனவில் தோன்றி இதற்குரிய அச்சுக்கூலியை ந.உ. சிவசாமி அவர்கள் (இடைவூர் - திருவாரூர் மாவட்டம் கைபேசி : 94424 75566) இடம் கேட்டு அவர்களது தாயார் இராஜாமணி அம்மையார் பேரில் ஞாபகார்த்த நினைவில் (சமர்ப்பணம்) வெளியிடு என்றனர். இச்செய்தியை தொண்டர்மணி ந.உ. சியிடம் கூறினேன். அவர்களும் சம்மதித்து முழுத் தொகையையும் தந்து உதவினர். நன்றி. திருமதி. இராஜாமணி அம்மாளுக்கு மகன்மார்கள் 6 பேர், மகள் - 1, பேரன், பேத்திமார்கள் 23 பெரிய ஆலவிரிச்சம் போன்றது குடும்பம். திருமதி. இராஜாமணி அம்மாள் சுவாமி குக. சதாசிவ அடிகளுக்கு அனைத்து உதவிகளும் செய்துள்ளதாக சுவாமி குக. சதாசிவ அடிகள் கூறினார் என்பது குறிப்பிடத்தக்கது.

இக் குடும்பத்தார்கள் அனைவரும் எல்லா வளமும் - நலமும் பெற்று வாழ வாழ்த்துகிறேன்.

கவியோகி. நாச்சிகுளத்தார்

மாஹின் பிரிண்டர்ஸ், செ - 1. ☎ : 25225143